# ஸப்தகிரி

[illegible] 1979



திருமலை திருப்பதி தேவஸ்தான சமய மாத இதழ்



சுவாமி சின்மயானநதா அவர்களை மாலையிட்டு வரவேற்கின்றூா தி தி தேவஸ்தான செயலாட்சித்தலைவா திரு. பி. வி. ஆர் கே. பிரஸாத அவர்கள்.

திருப்பதியில் **9–2–79** முதல் **18–2–79** வரை சுவாமி சின்மயானந்தா அவர்களின் **284**-வது தொடர் கீதைச் சொற்பொழிவு நடைபெற்றது.



சொறபொழிவு மேடையில்: சுவாமி சின்மயானந்தா, டாக்டர். எம். சாந்தப்பா (ஸ்ரீவேங்கடேஸ்வரா பல்கலைக்கழகத்துணை வேந்தர்) திரு. பி.வி.ஆர்.கே. பிரஸாத்.



சுவாமி சின்மயானநதா அவர்கள் தம தொடா சொறபொழிவினைத துவககி வைத்து, சிறபபுரையாறறுகினறூா



"ஆரா வமுதே அடியேன் உடலம்
நின்பால் அன்பாயே
நீரா யலைந்து கரைய உருக்கு
கின்ற நெடுமாலே
சீரார் செந்நெல் கவரி வீசும்
செழுநீர்த் திருக்குடந்தை
ஏரார் கோலம் திகழக் கிடந்தாய்
கண்டேன் எம்மானே"

—நம்மாழ்வார்.




# ஸப்தகிரி

**மார்ச் 1979**


மலர்: 9 இதழ் 10

தனிப்பிரதி **50** காசு.

வருடச் சந்தா ரூ. **6**





*சிறப்பாசிரியர்:*

திரு. பி. வி. ஆர். கே. பிரஸாத், I.A.S.,

*செயலாட்சித்தலைவர்,*

*தி. தி. தேவஸ்தானம், திருப்பதி.*

*ஆசிரியர்:*

திரு. கே. சுப்பாராவ், எம். ஏ.

*தி. தி. தேவஸ்தானம்,*

*திருப்பதி.*

*அச்சிடுபவர்:*

திரு. எம். விஜயகுமார் ரெட்டி,

*மேலாளர்,*

*தி. தி. தேவஸ்தான அச்சகம்,*

*திருப்பதி.*

முழு விவரங்களுக்கு,
Marketing Officer,
Publication Section,
T. T. D. Press Compound,
TIRUPATI-517501.


# உள்ளுறை



*அட்டைப் படம்:* "அலருலு குரியக ஆடேனதே" எனும் அன்னமாச்சார்யா சிருங்கார கீர்த்தனைக்கு திரு. பாபு வரைந்த சித்திரம்.

# ஆசிரியர் உரை

உலகக கலாச்சாரத் தொட்டிலாக விளங்கும பாரதம் ஒரு காலத்து, மக்களுக்கு நேரில இறைவன் தன் அருமை பெருமைகளை உணர்த்திட பல அவதாரஙகளை மேற்கொணட தவ பூமியாக விளஙகி, இறைவனை நேரில கண்டு அவன் பேருண்மைகளை உணர்ந்து உபநிஷத்துககளை, இதிகாசங்களை, காவியங்கள், புராணங்கள் போன்ற அற இலக்கியங்கள் மூலம பல ஆன்மீகக் கருத்துக்களை உலகுககு வழங்கிட்ட பல தவ ஞானிகளையும, அக்கருத்துக்களுக்கு ஒரு வடிவம் கொடுக்கும் வகையில் திகழ்நத பல சமயத தலைவர்களையும் தன்னகத்தே கொண்ட புண்ணிய பூமியாக விளங்கியது. எல்லாவற்றிற்கும மேலாக, சமுதாய ஏறறத்தாழ்வுகளால தாக்கப்பட்டுப் பிரச்சனைகள் பலவறறிறகு ஆட்பட்டு வரும இக்கலியுகத்தின் சாதாரண மனிதனுக்கு உளவியல் அடிபபடையில் அவனுக்கு வாழக்கையில நம்பிக்கையூட்டி உற்சாகப்படுத்தும் அரு மருந்தான கிதையின் பிறப்பிடமாகவும் விளஙகியது.

பாரதத்தின் இயற்கைப் பின்னணியும, இன்றளவும, ஆன்மீகச் சூழ்நிலை எங்கும் விளங்கிடும் வகையில் அமைந்துள்ளது. வானளாவிய சிகரங்களைக் கொண்ட மலைகளும், ஆனமிக அதிரலைவுகளைக் கொண்டு தவழ்ந்தும், நெளிந்தும் செல்லும்படியான கங்கை, யமுனை போன்ற நதிகளும, எஙகு நோக்கினும சமய உணர்வு தழைத் தோங்கிடும் வகையில திகழும் கோயில் கோபுரங்களும் இப்புனித பாரதத்தில் பரந்து விரிந்துள்ளன.

இததகு பெருமைமிகு பாரதத்தின் சிறப்புக்கு மகுடம் வைததாற் போன்று விளங்குவது அதனுடைய சமயமே யாம். உண்மையான ஆன்ம சுதந்திரத்தை வாரி வழங்கும் இந்து சமயம, இந்தியனின் வாழ்க்கைத் துறைகளில எல்லா வற்றிலும் ஊடுருவி, அதுவே அவனது வாழ்க்கையாக விளங்குகிறது. அச்சமயமே அவனுடைய நாட்டின் கலாச்சாரமாக விளங்கியது. மேலை நாடுகள் ஆதி மனித வாழ்க்கையை மேற்கொண்டிருந்தபோது, பாரதம் கலாச்சாரத்தின் இருப்பிட மாகத் திகழ்ந்து, பின்னர் வந்த ரோம் மற்றும் கிரேக்க நாகரிகங்களுக்கு ஒரு வழிகாட்டியாகவும் அமைந்தது. இத்தகு பெருமையுடன் விளங்கும் இந்தியக் கலாச்சாரம் பொறுமை, அன்பு, அறம், நேர்மை போன்ற ஆன்மீகப் பண்புகளைப பெற்றிருப்பதால்தான், பல்வேறு கால நிலைகளில் ஏற்பட்ட அரசியல் குழப்பங்களின போதும், அந்நியர் ஆட்சியின் போதும் பாரதம தன் தனிச் சிறப்பினை இழக்கவில்லை. தேவைகளையும் ஆசைகளையும வளர்த்துக் கொண்டு உலகாயுத இன்பங்களை அனுபவிக்கும்படியான வாழ்க்கையினைததான் 'தரமான வாழ்க்கை' (Standard of living) என்று மேலை நாடுகள் கருதி வரும் இவ்வேளையில், உள்ளுறையும் பரம்பொருளின அருமை பெருமைகளை உணர்ந்து, மேற்கூறிய ஆன்மீக அகக்கூறுகளை வளர்த்துக் கொண்டு, அதன் வழி நின்று மனிதனாக வாழும் வாழ்க்கையினையே 'தரமான வாழக்கை' (Quality of Life) என்று இந்து சமயம் உலகிற்கு அறிவுறுத்தி வருகின்றது. ஆம்! ''ஆசைகள் அதிகமாயின் ஆனந்தம் குன்றும்; தேவைகள் பெருகின் தேடியவை தேயும்'' என்னும் இன்றைய மனிதனுக்குத் தேவையான அடிப்படை அருங் கருத்தை நம் சமயம அன்றே எடுததுக்கூறியது. இதனை இன்று, தங்கள் தேவைகளினால் தாங்கள் கொண்ட உலகாயுதப் பொருட்களினால் வந்த மகிழ்ச்சியையும், இன்பத்தையும் பாதுகாத்துக்கொள்ளத் திணறிக் கொண்டிருக்கும் மேலை நாடுகள் பல நினைத்துப் பார்க்கின்றன.

உலகிற்கே ஒளி காட்டக்கூடிய அத்தகு பெருமைமிகு சமயத்தைப் பெற்றிட்ட நம் நாடு, இன்று, தனக்கு வழி காட்ட ஒரு துணையைத தேட வேண்டிய நிலையில் உள்ளது. இந்நிலை வருந்துதற்குரியது. நமது உலகாயுத வாழ்க்கை நிலை குன்றிடக் காரணம் நம்மிடையே ஆன்மீகப் பண்புகள் மறைந்து வருவதேயாம். பொதுவாக இளைஞர் சமுதாயம், குறிப்பாக மாணவர் சமுதாயம், கவலைப்படுதறகுரிய சூழ்நிலையில் உள்ளது. இதற்குக் காரணம் அவர்களுக்குத் தேவை யான தகுந்த வழிகாட்டி அமையாததுதான். சமயத்தைப்பற்றி பேசுவதைவிட, தததுவார்த்தங்களை வாயால் விளக்கு வதைவிட, சமயம் விதித்த வழியே முழுமையாக வாழ்ந்து காட்டிய உத்தம புருஷர்கள் நமமிடையே மறைந்து வருவது, இளைஞர் சமுதாயத்தினர்க்கு ஒரு மறைமுகமான இழப்பேயாம். ஏனெனின், பூரணத்துவம் பெற்ற ஞானிகளின் வாழ்க்கை உதாரணத்தாலேயே வளர்ந்த வந்த சமயம் இந்து சமயம். வாழ்க்கைக்குத தேவையான இறைமைப் பண்பு களின் அவசியத்தை நச்சிகேது, துருவன், பிரஹலாதன் போன்ற உபநிஷத் மற்றும் புராணக் கதை மாந்தர்கள் பின்னர் வரும் சந்ததியினர்க்கு எடுத்துக்காட்டாக விளங்கினர். மகாபாரதம் மற்றும் இராமாயணம் கூறிய உன்னதக கருத்துக் களை, அக்காவியங்களின் கதைப் பாத்திரங்களின் சிறப்புப பண்புகளை தன் தாய் எடுத்துககூற, அவறறினை தன் சிறுவயதில் மனதிற் நிலைநிறுத்திக் கொண்டதால்தான் பின்னர் வீரர்களில் திலகமாக, இந்து சமயத்தின் காவலனாக சிவாஜி விளங்க முடிந்தது. இந்தியச் சுதந்திரப் போராட்டத்தில் குதித்த தலைவர்களில் பலர், நம் சமய இலக்கியங்கள் பலவற்றை கரைத்துக் குடித்தவர்களாக இருந்தனர். இதற்குக் காரணம் அவர்களுடைய பெறறோர்கள் எடுத்துக்கொண்ட தனி முயற்சியும், குருகுலவாச முறையுமாகும். ஆனால் இன்று உலகாயுத தேவைகளை மனதிற் கொண்டுதான் தம் குழந்தை களை வளர்க்க பெற்றோர்கள் முயற்சிகளை மேற்கொள்ளுகின்றனர். மேலும் ஆரம்பப் பள்ளிக்கூடங்களில் ஆன்மீகப் பண்பு கள் வளர்வதற்கு அவசியமான நீதிக் கதைகளை விளக்கும் பாடங்கள் அவ்வளவாக இடம் பெறுவதும் இல்லை. இவை, வளரும் குழந்தைகளுக்கு நாம் செய்யும் மறைமுகமான கேடாகும். லௌகிக விஞ்ஞான முன்னேற்றங்களால் ஆத்ம சாந்தி காண முடியவில்லை என்பதை வல்லரசு நாடுகள் நிதரிசனமாகக் கண்டு வரும் இந்நாளில், நமக்குப் பெருமை தரும் சமயக் கல்வியின் அவசியத்தை இப்போதாவது சம்பந்தப்பட்டவர்கள் உணர்தல் வேண்டும். தமது பிள்ளைகளின் கல்வி பிரச்சனைகளை பள்ளிக்கூடங்கள் கவனித்துக் கொள்ளும் என்று பெற்றோர்கள் இன்று வாளா இருப்பின், நாளை அவர்களது பிள்ளைகளே அவர்களுக்கு ஒரு பெரும் பிரச்சனையாக விளங்கக்கூடும்.

ஆகவே, தங்களுடைய பிள்ளைகளுக்கு, நமது கலாச்சார பெருமையினை விளக்கும் உபநிஷத்துக்கள், இதிகாசங் கள் மற்றும் புராணங்கள் போன்றவற்றில் காணப்படும் உன்னதமான ஆன்மீகக் கருத்துக்களை விளக்கும்படியான நிகழ்ச்சி களை பொறுமையுடனும், உற்சாகத்துடனும் எடுத்துக்கூற, பெற்றோர்கள், நாளில் ஒருசிலமணி நேரங்களையாவது ஒதுக்கினால், அதுவே இந்த ''உலகக் குழந்தைகள் ஆண்டில்'' நாம் அவர்களுக்கு வழஙகும் ஒரு மாபெரும் பரிசாக அமையும்.

# பொறுப்பாண்மைக் குழு முடிவுகள்

(18-1-79 அன்று திருமலையில் கூடிய குழு கூட்டத்தின்போது தீர்மானிக்கப்பட்ட சில முக்கிய முடிவுகள் பின்வருமாறு)

திருமலையில் மது விலக்குச் சட்டத்தினைத் தீவிரமாக்கும் வகையில், ஆந்திர மாநில அரசினால் திருமலையில் நியமிக்கப்படும் 'எக்ஸைஸ்' ஊழியர்களுக்கு (10 நபர்களுக்கு மிகாமல்) திருமலையில் தங்கு வசதியும், தேவஸ்தான ஊழியர்களுக்கு வழங்கப்படுவதைப் போன்றே குறைந்த விலையில் உணவு வசதியும் வழங்க குழு ஒப்புதல் அளித்துள்ளது.

தெலுங்குக்கவிஞரும், ஸ்ரீ வேங்கடேஸ்வரரின்மீது சுமார் 32,000 கீர்த்தனைகளை இயற்றிய பக்தருமான கி.பி. 15-ம் நூற்றாண்டைச் சார்ந்த ஸ்ரீதாள்ளபாக்க அன்னமாச்சார்யாவின் கீர்த்தனைகளின் பெருமையைப் பரப்பும் வகையில் தி. தி. தேவஸ்தானத்தாரால் மேற்கொள்ளப்பட்ட திட்டத்திற்காக குழு ரூ. 50,000 ஒதுக்கியுள்ளது.

வருடம் ஒன்றிற்கு 12 அன்னமாச்சார்யா கீர்த்தனைகளுக்குப் பண்ணமைக்குமாறும், மேலும் அவற்றினை, திருமலையில் வருடம் ஒரு முறை நடைபெறும் தங்கள் கச்சேரிகளில் பாடவும், தி. தி. தேவஸ்தானத்தாரால் நியமிக்கப்படும் வித்வான்களை (வாய்ப்பாட்டு) குழு கேட்டுக் கொண்டது. சாதாரணமாக வழங்கப்படும் சிறப்பூதியம் தவிர, அவர்களுக்குத் தலா ரூ. 3000 அல்லது அதற்குப் பெறுமான பொருள் வழங்க குழு தீர்மானித்துள்ளது.

திரு. கே. சிவராமய்யா அவர்கள் தெலுங்கில் எழுதிய ''ஸ்ரீ பிரார்த்தனு பாகவதம்'' எனும் நூலினை பிரசுரிக்க குழு தீர்மானித்துள்ளது.

ஸ்ரீ சேப்ரோலு சுப்ரமண்யசர்மா அவர்கள் தெலுங்கில் எழுதிய ''ஸ்ரீ ஹிருதயாரவிந்தம்'' எனும் நூலினைப் பிரசுரிக்கவும், மேலும் அவருக்கு அதற்காக ரூ. 1500-ம், பிரசுரித்தப் பிறகு அந்நூலின் 50 பிரதிகளை வழங்கவும் குழு தீர்மானித்துள்ளது.

ஸ்ரீசிஸ்ட்ல சுப்பாராவ் அவர்கள் எழுதிய தெலுங்கு ''பகவத்கீதை''யை மறுபடியும் பிரசுரிக்க (75,000 பிரதிகள்) குழு தீர்மானித்துள்ளது.

தி. தி. தேவஸ்தான ஊழியர்கள் அணிந்து கொள்வதற்கென, ''அடையாளத்தகடுகள்'' வாங்குதற்கு, சென்னையிலுள்ள ரேவதி இண்டஸ்ரீஸ் எனும் நிறுவனத்திற்கு, அதற்கான சரக்காணை வழங்க குழு அனுமதி அளித்துள்ளது.

திருப்பதி சத்திரத்தில் 28-11-78 அன்று காலை திருடன் ஒருவனைப்பிடித்துக் கொடுத்துதற்காக அச்சத்திரத்தில் பணிபுரியும் தி. தி. தேவஸ்தான ஊழியரான திரு. கே. ராஜகோபால் ரெட்டிக்கு சிறப்புப் பரிசாக ரூ. 25/- வழங்க குழு முடிவு செய்துள்ளது.

யாத்திரிகர்களுக்கு விற்பனைக்குக் கிடைக்கும் வகையில் ஸ்ரீ வேங்கடேஸ்வரரின் திருவுருவம் பொறித்த அலுமனியச் சுவற்றுப்படங்களை வாங்குவதென குழு தீர்மானித்துள்ளது.

ஆந்திர மாநிலம் ஜங்கம் தாலுக்கா பாகாலாவில் ஹரிஜன காலனியில் ஸ்ரீராமமந்திரம் (வழிபாடு அரங்கு) ஒன்றினைக்கட்ட குழு ரூ. 10,000 ஒதுக்கியுள்ளது.

உத்திரப்பிரதேசத்தில் ஸ்ரீ விஸ்வாநந்தா ஸம்ஸ்கிருத மகாவித்யாலாயா கட்டிடம், சமீபத்தில் ஏற்பட்ட பாகீரதி நதி வெள்ளப் பெருக்கினால் பாதிக்கப்பட்டதனால், அக்கல்லூரிக்கு உதவும் வகையில், அக்கல்லூரியின் மாணவர் விடுதி கட்டிடத்தை மீண்டும் கட்டுதற்கு தன்பங்காக ரூ. 25000 வழங்குவதென்று குழு தீர்மானித்துள்ளது.

தி. தி. தேவஸ்தான ஊழியர்களுக்கு, அவர்களுக்கென குடியிருப்புக்களை கட்டித்தர, தி. தி. தேவஸ்தான மேலாண்மையே அதற்கான முழு பொறுப்புக்களை ஏற்றுக் கொள்ள குழு அனுமதி அளித்துள்ளது.

திருமலையில் பணிபுரியும் தேவஸ்தான ஊழியர்களான திரு. பி. ராமசந்திரடு, திரு. இ. நரசிம்மாரெட்டி ஆகியோர் தாங்கள் கண்டெடுத்த யாத்திரிகர் ஒருவரின் பணத்தினை உரியவரிடமே சேர்ப்பித்ததால், அவர்களுடைய நேர்மையினைப் பாராட்டி அவர்களுக்குத் தலா ரூ. 25 வழங்க குழு தீர்மானித்துள்ளது.

(38-ம் பக்கம் பார்க்க)

## சந்தாதாரர்களுக்கு . . .

30-4-79-ம் தேதியுடன் சந்தாக் காலம் முடிவடையும் சந்தாதாரர்களின எண்கள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன. ஆகவே அவ்வெண்கள உடைய சந்தாதாரர்கள் தங்கள் சந்தா எண்களைக் குறித்துக் கொண்டு தாங்கள் செலுத்த வேண்டிய தொகையைச் செலுத்தி தங்கள் சந்தாவைப் புதுப்பித்துக் கொள்ளவும்.

T

24, 154, 171, 187, 192, 196, 214, 284, 316, 382, 387, 466, 487, 1120, 1131, 1150, 1163, 1169, 1176, 1180, 1343, 1761, 1803, 1825, 1828, 1829, 1842, 1851, 1854, 1858, 1866, 2029, 2567 முதல் 2611 வரை, 2614 முதல் 2646 வரை, 2648 முதல் 2661 வரை, 2679.

# இகலோகத்திற்குப் பின்னர் இவ்வுடலும்

பிறப்பின் இரகசியத்தைப் பல்வேறாக ஆராய்ச்சி செய்து பல்வேறு கண்டுப்பிடிப்புக்களை உலகுக்கு நல்கிய மனிதன் இறப்பின் இரகசியத்தை இன்னும் காண முயன்றும் முடியா நிலையில் பேதலித்து நிற்கிறான்.

மரணத்தின்போது நிகழும் சலனங்களை அறிந்தவன், மரணத்திற்குப் பின்னர் அவ்வுடல்களில் எழும் மாறுதல்களை அறியாமல் உலக வாழ்க்கையின் நிலையற்ற தன்மையை வெறும் நிலையான தன்மை என்று கருதி புதிது புதிதான முறையில் சோதனைக் குழாய் குழந்தையைச் செய்து உமி குத்திக் கை சலிக்கிறான்.

பிறவிகளின் வகைகளை 84 வகைகளாகப் பிரித்துக் காட்டியுள்ளனர். சில முட்டையில் உருப்பெறும்; சில வேர்வையில் வெளிவரும்; சில வித்தால் தோன்றும்; சிலப் பல கருவில் உருவாகும். ஆக நிற்பன, நெளிவன, தத்துவன, தவழ்வன, நடப்பன, கிடப்பன, பிறப்பன ஆக 7 வகை பிறவிக் கூறுகள் பேசப்பட்டுள்ளன. யோனி பேதங்களில் ஊர்வன 11 வகை, பறவையில் 10 வகை, விலங்குகளில் 10 வகை, தாவரத்தில் 20 வகை, மனிதரில் 9 வகை, தேவரில் 14 வகைகளாகத் தரம் பிரித்துக் காட்டுகின்றனர்.

திரு. E. S. குமரன், B.Sc.,
சேலம்.

மேற் சொன்ன பிரிவுகள் தத்தம் வினைகளுக்கும் கருமங்களுக்கும் ஏற்ப இறைவன் அருளால் உடல், கரணம், நல்லன, தீயனவாகப் பிறப்பெடுத்துச் சலிக்கும்.

**பிறவிப் பந்தம் :**

உயிர்களுக்கு நுண்ணுடல், பருவுடல் அளித்தல் ஆகிய படைப்புத் தொழிலைச் செய்கிறார் அயன்.

உயிர்கள் தாம் செய்த வினைப்பயனை நுகர உடலில், கரணத்தில், உலகைத் தந்து காத்தலைச் செய்கிறார் திருமால்.

பிணி முதலியன வந்து பக்குவம் அடைய ஆழ்ந்த துன்பத்தை அனுபவிக்கக் கொடுத்து இனி பிறிதொரு பிறவியில் இளைப்பாறச் செய்கிறார் உருத்திரன்.

அறுவையின்போது மயக்க மருந்து அளித்து அந்த அறுவையை மேற்கொள்ளுதல்போல் உயிர்களுக்குத் துன்பம் தோன்றாது மறத்தல் மற்றும் மறைத்தலைச் செய்கிறார், மகேசன்.

இன்பத்தில் இன்பத்தினை விழையாது துன்பத்தில் துன்பத்தினை உறாது அருள் சுரந்து ஆட்கொண்டு அருளிச் செய்கிறார் சதாசிவம்.

பல கோடி அண்டம் உருவாகி
அங்கம் சராசரமாய்க்
கண்ட சக்தி மூன்றும் கரணமாய்த்
தொண்டுபடும் ஆவிப்
புலனுக்கு அறிவளிப்ப ஐந்தொழி
லும் ஏவித்
தனி நடத்தும் எம் கோவே''.
—குமரகுருபரர்.

''உலகமே உருவமாக யோனிகள்
உறுப்பதாக
இலகு பேரிச்சா ஞானக்கிரியை உட்
கரணமாக
அலகிலா உயிர்ப்புலன் கட்கு அறி
வினையாக்கி ஐந்து
நலமிகு தொழில்களோடு நாடகம்
நடிப்பன் நாதன்''.
—சிவஞான சித்தியார்.

**உயிர்விடும்போது :**

பிறவித் தொல்லைத் தீராத தொல்லை. நிழலைப் பிடுங்கித் தூர எறிய நினைக்கும் மனிதன் இறப்பின் போது நிகழும் மாற்றங்களைப் பின்வருமாறு அறிகிறான். அதாவது மரணக்குறிகளை அறிகிறான்.

இரத்த ஓட்டம் நின்றுவிடுவதால், கையில் நாடி நின்று விடுவதால், மார்பில் கை வைத்துப் பார்க்க இருதயத் துடிப்புத் தெரியாததால், காதில் கேட்காததால் உணர்தல்;

மூச்சு நின்றுபோய்விடுவது; மார்பு வயிறு இரண்டும் அசைவற்று நின்றிருப்பது; ஒரு கண்ணாடியை வாயின் முன்னர், நாசியின் முன்னர்ப் பிடித்தால் அதில் ஆவி அடிக்காது. உடல் குளிர்ந்துவிடுகிறது. உடல் படிப்படியாய் விறைக்கும். கண்கள் பஞ்சடைந்து, ஒளியற்று மங்கிப்போய் உள்ளடங்கிவிடும் ஆகிய தன்மைகளால் அறிகிறான். அவனுக்குத்தெரிந்த இந்த நிதரிசனமான நிலையால் இறந்தவனை வெளிப் பயணத்திற்கு அனுப்புகிறான். அதன் பின்னர் அவரவர் சம்பிரதாயங்களுக்கு ஏற்ப அந்த சடலத்தைப் புதைக்கவோ, எரிக்கவோ செய்கின்றனர். மேற் சொன்ன உடல் ஐந்து வகைப்படும்.

1. தூல உடம்பு அல்லது பருமை உடம்பு
2. சூக்கும உடம்பு அல்லது நுண்மை உடம்பு
3. காரண உடம்பு அல்லது முதன்மை உடம்பு
4. குண உடம்பு அல்லது குண சரீரம்
5. சஞ்சுக உடம்பு அல்லது சஞ்சுக சரீரம்.

**உடம்பின் தன்மை ;**

தூல உடம்பு மாண்டாலும், மற்ற நான்கு உடம்புகளும் பிறவிகள் தோறும் தூல உடம்பில் பிரவேசிக்கும்.

# உயிரும் உருவிலியா?

பிராண உடம்பு நெறறிக கண பார்வைக்குச் சிறிது கறுத்து, சாம்பல் நிறப் புகையினுலோ, மூடுபனியாலோ, மேகத்தினுலோ, நீலமான மந்த ஒளி உடையதாய இருக்கும். கருவுடம்பு எனப்படும்.

பிராண உடமபின்றி, அன்ன உடம்பு தனித்து இயங்காது. அதே போல் அன்ன உடம்பின்றி, பிராண உடம்பு தனித்தியங்காது.

ஆதலால் எரிக்கும்போது, பிரிககப் பட்ட பிராண உடம்பின் பிணம், யாதொரு உணர்ச்சியுமின்றி, வீட்டைச் சுற்றியோ, கடுகாட்டைச் சுற்றியோ சில காலம் மிதந்து கொண்டிருந்து, காலக்கிரமத்தில், சிறிது சிறிதாக உலேந்துப்போகும். சுடுவதற்குப் பதிலாகச் சவம் புதைக்கப்பட்டால், அது அழுகி மண் தின்று போகிறவரை, பிராண உடம்பும் அதன் மேலே மிதந்து கொண்டிருக்கும். அங்ஙனம் மிகச்சாவதானமாக அழிவுறும்போது, இடைக் காலத்தில் அது அங்கஹீனமாகவும், மிகவும் அருவருப்பாகவும் பயங்கரமாகவும் காட்சியளிக்கும். சுடுகாடு, இடுகாடுகளில் பயந்தவர்கள் கணணுக்குப் பேயாகத் தோன்றுவதும் இதுவே. இது வெறும் பிராண உடம்பின் பிணமாகும். இதையே குட்டிச் சாத்தான் வித்தைகளுக்கு உபயோகிக்கின்றனர்.

அஷ்ட தசபுஜ லக்ஷ்மி துர்க்காதேவி–ஸ்கந்தாச்ரமம்–சேலம்.
திரு. கே. சீதாராம்-கோவை.



**உடமபின் சாசுவதம் :**

பிராண உடம்பு பழைய பஞ்சபூதத்திற்கும், புதிய சப்த பூதத்திற்கும் ஒப்பிட்டுப்பேசப்படுகிறது. 1. கட்டிப் பொருள், 2. நீர்ப் பொருள், 3. வாயுப்பொருள், 4. ஆகாயம், 5. நுண்ணுகாயம், 6. திரட்டணு, 7. அணு. ஆக இவைகள் அடங்கிய பிராணமயகோசமாகவும், அன்னமயகோசமாகவும் உருவிருந்து, உருவாகி, உருமாறி செயல்களைச் செய்கிறது.

இந்த ஏழுப் பொருட்களில், கட்டிப் பொருள், நீர்ப்பொருள், வாயுப் பொருள்களால் ஆன அன்ன உடம்பு அன்னமயகோசமாக அன்னம் உண்ணுதல் போன்ற செயலைச் செய்துய்கிறது.

ஆகாயம், நுண்ணுகாயம், திரட்டணு, அணு ஆகியவைகளால் ஆன பிராண உடம்பு பிராணமயகோசமாக பிராணனை உண்டு உண்டு பரிபாலனை அடைகிறது.

**உடலும் ஆலயமுm :**

ஒரு மனிதனை அடிப்படையாகக் கொண்டே, ஆலய அமைப்பு உள்ளது: மனிதன் மேற்கு தலைவைத்துக் கிழக்குக் கால் நீட்டி மல்லாந்து படுத்திருப்பதைக் காட்டுவது ஆலயங்களின் மூலஸ்தானம் முதல் முன் கோபுரம் வரை உள்ள பாகமாகும்.

எண்சாணுடம்பிற்குச் சிரசே பிரதானமாவதுபோல ஆலயத்திற்குப்பிரதானமாகிய கர்ப்பக்கிருகம் முகமாகவும், அர்த்தமண்டபம கழுத்தாகவும், துவாரபாலகர் நிற்கும் இடங்கள் மனிதனுக்கு காவல் புரியும் இரு தோள்களாகவும், அங்கிருந்து கொடிமரம் வரை முண்டாகாரமான உடம்பாகவும்; கொடிமர ஸ்தானம் குதமாகவும், கொடி மரம் முதுகுத் தண்

டாகவும், தடை வரை வாயிற கோபுரம் உயாந்து நிற்கும் பாதங் களாகவும் ஆசமங்களில் உருவகப் படுத்திக் கூறப்படுகின்றன.

மூலஸ்தானத்திற்கு மேலுள்ள விமானம் மனிதனுடைய பிரமமரநதிரம எனற சகஸ்ராரச் சககரத்தை அறிகுறியாகக் காட்டுவது. அந்தச் சக்கரம் ஆயிரம இதழ்களுடைய இரண்டடுக்குத் தாமரை போன்றது.

மனிதனுடைய உடம்பு தொகுதியே கோயிலின் பிராகாரங்கள், அதாவது முதல் பிராகாரமாகும்.

மனிதனுடைய ஸ்தூல, சூட்சம காரண உடமபுகள் கோயின் 3-ம் பிராகாரங்களாகும்.

மனிதனுடைய அன்னமய, பிராணமய, மனோமய, விஞ்ஞானமய, ஆனந்தமய கோசங்கள் 5-ம் பிராகாரங் களாகும்.

மனிதனுடைய அன்ன, பிராண, இச்சை, உருவமன, அருவமன விஞ்ஞான, ஆனந்த உடம்புகள் 7-ம் பிராகாரங்களாகும்.

**உடலும் பிரகிருதியும் ;**

அதேபோல் எழு உடம்பினை உருவகப்படுத்தியே ஏழு உலகங்களும் பேசப்படுகின்றன.

ஏழு உலகங்களும் மாபெரும் பந்துகளாக ஒன்றினுள் ஒன்றாய் வியாபாக வியாப்பாய முறையில் அமைந்திருக்கும். இங்கு நாமிருக்கும் இடத்தில் இப்போதும், எப்போதும் ஏழு வெவ்வேறு உலகங்கள் ஒன்றுபோல் விரவி அமைந்துள்ளன. இங்கிருந்து மேல் நோக்கியோ, கீழ் நோக்கியோ செல்லச் செல்ல அவ்வுலகங்கள், ஒவ்வொன்றாக நீங்கிக் கொண்டே வந்து கடைசியில் கைலாயம் ஒன்றே மிகுந்திருக்கும், அதனால். இங்கு நாமிருக்கும் இடத்தில் சப்த உலக வாசிகளும் சஞ்சரிக்க முடியும், சஞ்சரிக்கின்றனர் என்பது தெளிவு.

ஆவிகளின் அமைப்பு :

பூதனா சரீரம் போனாற் புரியட்ட
ரூபந்தானே
யாதனா சரீரமாகி இன்பத் துன்பங்க
ளெல்லாம்
நாதனா ஆணை துய்க்க நரகொடு
சுவர்க்கம் துய்த்து
தீதிலா அணுவாய் யோனி சேர்ந்திடும்
சீவன் எல்லாம்.
—சிவஞானச்சித்தியார்.

ஆவிகளின் செயல்களின் முக்கிய நோக்கம், மண்ணுலகில் இருந்து வெளியேறியபோது தொடர்பு அற்றுப் போகாத தமது விருப்பு வெறுப்புக்களை பூர்த்திசெயதுகொள்ளுதலாகும்.

உயிர் என்ற ஆவி உடலைப் பிரிந்த பின்னர் சஞ்சரித்துக் கொண்டிருக்கும்.
—எகிப்து.

அதாவது நுண்ணுடலை விட்டுப் பிரிந்த ஆவி தனி உலகில் சுற்றித் திரியும்.

யாரும் யாவையும் எனககுத் தனித்
தனித
தாயாராகியும் தந்தையாராகியும்
வந்திலாதவரிலலையான் அவர்
தந்தையராகியும தாயாராகியும்
வநதிராததும் இல்லை.

பரு உடலை நீத்த பின்னர், நுண்ணுடல் வெளியேறி இணைப்புக்கயிறுகி, பின்னர் அறுந்துவிடும், பரு உடலை விட்டு உயிர் நீங்கிய பின் சில காலம் இந்த நுண்ணுடலில் தங்கியிருக்கும்.

அகால மரணங்களில், இறந்த சிலர் உலக விருப்பு பற்றுக்களில் தோய்ந்தவராய், நுண்ணுடலோடு சில காலம் இயங்கி நிற்பர். பின்னர் இவை விழுப்பு நிலை உண்டாகி ஆவிகள் மேல் நிலைகளைப் பெறுகின்றன.

இந்நுண்ணுடலை நீக்கி ஆவி வெளிப் போனால் மீதி நுண்ணுடல் பூவுலகில் சுடுகாடு, வயல், கரையோரம், பாழடைந்த மண்டபம் போன்ற இடங்களில் திரிகின்றன.

ஆவிகள் மனிதனைவிட மிருகங்களிலும் ஆவேசித்து இயங்கும். அவைகளினபால் ஏவலும செயலும் ஒரு வெறித்தனமான, கண்மூடித்தனமான நிறைவேற்றம், பழிவாஙகலின் காரணமாகத்தான அல்லாடித்திரியும். திட சங்கலபமற்ற பெருத்த ஆசைகளுக்கு ஆளான அல்ப ஆயுசுகொணட ஒரு ஆவி கீழ்த்தர ஜந்துக்களின் மூலம் ஒரு நிறைநத இச்சையைத் தீர்த்துக் கொள்கிறது.

ஆவிகளின் பேச்சும் எழுததும் சாத்தியமானவை. ஆவிகள் ஒருவரது குரலை நிறுத்தி அவர் மூலம் தம் குரலை (Ectoplasm) ஒலி செய்துள்ளன.

ஆவி, ஆவேசிக்கப் பெற்றதும் இயக்குநரின் (Predium) கை விரல்கள் அசைந்து எழுதும்.

**ஆவிகளின் செயல்கள் :**

ஆவிகளுடன பேசுதல் (Ouja board) என்பது பல வகை கடந்த கால நிகழ்ச்சிகளைத் தெரிவித்துத் தம்முடைய பரிதாபங்களால் ஒரு குடும்பத்துக்கு நேர்ந்த தீங்குகளுக்கும், பரிதவிப்புக்களுக்கும் பரிகாரம் தேடும் முகமாய் தங்களுடைய கருத்துக்களை வெளியிட்டுத் தம்முடைய செயல்களுக்கு மன்னிப்பு கோரும்; மேலும் தாம் செய்த கொலைகளைப்பற்றித் தெரிவித்து நிரபராதிகளை விடுவிக்கும்.

ஒரு ஆன்மா தீய சிந்தனை தீய செய்கை உடையதாயின் அதன் சூக்கும உடம்பும், உடையும் கரிய நிறம் உடையன வாகின்றன.

ஆயின் ஒரு பிறந்த குழந்தை, உடனே இறந்துவிடின் அதன் ஆன்மா எந்தவிதமான உலகார்த்தமான பழி பாவங்களுக்கு ஆளாகாததால் பரிசுத்தமான சிந்தனையுடையதாய் தோன்ற அதன் சூக்கும உடம்பும் தும்பைமலர் போன்று வெண்மையாய் இருக்கும். (34-ம் பக்கம் பார்க்க)




# எங்களுடைய "ஸப்தகிரி" விற்பனைப் பிரதிநிதிகள்

திரு. கே. ராகவாச்சாரி,
நியூஸ் ஏஜெனட்,
ரமணி ஸ்டோர்ஸ், கும்பகோணம்.

திரு. வி. வி. ரங்கசுவாமி,
ஸ்ரீ வேங்கடேசாயா ரங்கநாதம் சிட்பண்ட்ஸ்,
6-14-140, கோட்டூர் (சாலை)
பாளையங்கோட்டை - R.M.S.
திருநெல்வேலி-2.

திரு. பி. கே. சுந்தரராஜன்,
21, முராரிவரதய்யர் தெருவு,
சேலம் டவுன்.

திரு. எஸ். ராமகிருஷ்ணய்யா,
ஸ்ரீ மாருதி காபி வர்க்ஸ்,
ஸ்டேஷன் ரோடு,
ஹோஸ்பெட் (அஞ்சல்) R. S.
கர்நாடக மாநிலம்.

திரு. சி. எஸ். குண்டுராவ்,
845, பி. பி. கார்டன்,
கே.ஆர். மொஹல்லா (அஞ்சல்)
மைசூர்-4.

திரு. எஸ். ஸ்ரீகாந்த ஐயர்,
7/114, செல்லாண்டி அம்மன் [கோயில் வீதி.
19-வது பிளாக்
மேட்டூர் அணை ஆர். எஸ்.

திரு. ஆர். சம்பத் குமார்,
c/o N. கோதண்டராமன், கனரா
பேங்க், 25, நந்தி கோயில் தெரு,
தெப்பக்குளம், திருச்சி-2.

திரு. வாசு வெங்கடேஸ்வரன்,
ஸ்ரீ கண்ணன் ஸ்டோர்ஸ்,
மெயின்பஜார், எம். ரெட்டிபட்டி,
(via) அருப்புக்கோட்டை.

திரு. கே. பி. ஆர். சுவாமி,
106, மஹீம் மேன்சன்,
ஸ்டேஷன் ரோடு,
மஹீம், பம்பாய்-16.

திருமதி.ஏ.வனஜாகிருஷ்ணமூர்த்தி,
46, பழனியாண்டவர்கோயில்தெரு,
களஞ்சியம் ஏஜென்ஸீஸ்,
கொஸபாளையம், ஆரணி-1.

பாஸ்கர் நியூஸ் ஏஜென்சி,
டெய்லி மார்கட், ஜெய்பூர் (P.O.)
கோராபுட் மாவட்டம்.

தினமணி ஸ்டோர்ஸ்,
8/1, பழைய போஸ்ட் ஆபிஸ் வீதி
கோயம்புத்தூர்-18

டாக்டர். பி. கே. கேசவன்.
செவன் ஹில்ஸ்,
2, எம்.எம்.எம். ரெட்டி வீதி
ஜோலார்ப்பேட்டை.

திரு. ஏ. அருணசலம்,
22/13. வாளிபாளையம்.
1-வது வீதி, திருப்பூர்.

திரு.எஸ்.என்.கிருஷ்ணய்யாசர்மா
10-354 சின்னக்கடை பஜார்,
பரமக்குடி (அஞ்சல்)
இராமநாதபுரம் மாவட்டம்.

திரு. கே. எஸ். கோதண்ட
ராமய்யா, M.A., B.O.L.,.B.T.,
ஓசூர். தர்மபுரி மாவட்டம்.

திரு. பி. விஜயேந்திரா,
நியூஸ் ஏகஜண்ட், நகரி (அஞ்சல்)
சித்தூர் மாவட்டம் (ஆ.பி.)

திரு. ஜி. ஸ்ரீநிவாச ஐயங்கார்,
965, வெங்கோப ராவ் லேன்,
ஸ்ரீ வேங்கடேஸ்வர பெருமாள் [வீதி,
தஞ்சாவூர்.

திரு. ஏ. ரங்காச்சார்யா,
12-5-5. எஸ்.வி.என். வீதி,
பாபைய்யா பேட்டை, சேமன்,
வரங்கல் (அஞ்சல்) ஆ.பி.

திரு. வி. ஆறுமுகம்,
பழைய இரும்பு வியாபாரம்,
72. காந்தி மார்க்கட்,
பொள்ளாச்சி-642001.

திரு. ஏ. கே. சுப்ரமணியம்,
நியூஸ் ஏஜெண்ட்,
பாகாலா (அஞ்சல்)

திரு. டி. எஸ். கிருஷ்ணமூர்த்தி,
சிரௌதிகள்
74, ஏ, கிழக்கு முதல் தெருவு,
மன்னார்குடி-614001.

திரு. ஏ. முனுசாமி கௌடா,
ஓல்டு போஸ்ட் ஆபீஸ் ரோடு,
முலபாகல், கோலார் மாவட்டம்.

திரு. டி. சீனுவாஸாசார்யா,
4, சௌந்தரம்மாள் வீதி,
லட்சுமிபுரம்,
குரோம் பேட்டை, சென்னை-44.

திரு. எஸ். நாகராஜகுப்தா,
நியூஸ் ஏஜண்ட் & ஜெனரல் [மர்ச்சண்ட்,
கிழக்கு பஸ் நிலையம்,
சித்தரதுர்க்கா.

திரு. வி. திருவேங்கடம் நாயுடு,
73, காளிமுத்து பிள்ளை லேன்,
திண்டுக்கல்.

திரு. ஏ. என். கிருஷ்ணமூர்த்தி,
157, கார்டன் ஏரியா,
ஷிமோகா.

திரு. பி. ராம்மோஹன மூர்த்தி,
28-88 ராமேஸ்வரம் அக்ரஹாரம்,
புரதொட்டூர்,
கடப்பை ஜில்லா.

திரு. வி. ஜே. ஜனார்தனன்,
11, புஜங்கராவ் வீதி,
சாலவன் பேட். வேலூர்.

திரு. ஆர். வெங்கடேசன்,
68, தெற்கு மாடவீதி,
திருவொற்றியூர், சென்னை-19.

கேப்டன். டி. இ. என். சாரி, பி.ஏ.
16, ஜி. எஸ். டி. ரோடு,
செங்கற்பட்டு-603001.

திரு. கே. ஆர். பாஸ்கர் செட்டி,
22/110,மெயின் தெரு, குண்டக்கல்
அனந்தப்பூர் மாவட்டம்
ஆ. பி. (P.O.)

திரு. வி. லக்ஷ்மி நாராயண செட்டி [யார்
மளிகை, பஜார் தெரு,
இடப்பாடி, சேலம் மாவட்டம்.

திரு. எம். வீரபாகு,
19, தெற்கு ரத வீதி,
ஆழ்வார் திருநகரி, தமிழ் நாடு.

திரு. எஸ். ஜகன்னாதன்,
17-3-1/5 சுந்தரய்யர் வீதி,
சித்தூர். (ஆ. பி.)

திரு. பி. ராஜமாணிக்கம்,
1 மஹாலி அம்மன் கோயில் தெரு,
ஆனைமலை-642104.

திரு. எம். வெங்கடராம அய்யர்,
நெ. 8, தாரகேசவரர் சுவாமி வீதி,
தோட்டபாளையம், வேலூர்.

திரு. ஏ. கணபதி பிள்ளை,
ஸ்டாம்ப் வெண்டார்,
அறகண்ட நல்லூர்-605752.

திருமதி. எஸ். சீதாலக்ஷ்மி,
1, ஜவுளிக்கார தெருவு,
திருவாரூர்-610001.

திரு. எம். வீரபாகு
19, தெற்கு ரத வீதி,
ஆழ்வார் திருநகரி-628612.

# இலங்கேஸ்வரனும் திதுறு விசாகமும்

"Ere sin could Blight or Sorrow Fade
Death came with Friendly Care"
—Coleridge.

பாவம் கொல்லுமுன், துயரம் வதைக்குமுன், மரணம் நண்பனைப் போல் வந்து மனிதனுக்கு உதவி புரிகின்றது என்பதை கவி விளக்கிக் கூறியிருப்பதைக் காண்கிறோம் 'முக்கோடி வாழ்நாளும், முயன்றுடைய பெருந்தவமும், முதல்வன் முன்னாள், எக்கோடி யாவராலும் வெல்லப்படா என்று கொடுத்தவரமும் திக்கோடும், உலகனைத்தும் செருக்கடந்த புயவலியும் தின்று மார்பில், உயிர் பருகி புறம் போயிற்று புனிதவாளி' என்று மிகவும் சுருக்கமாய் முடிக்கிறார் கம்பர். இத்தகைய வீரமுள்ள இலங்கேஸ்வரனை ஒரு நொடியில் அழிக்கும் சக்தி எப்படி வந்தது என்று ஆராய்வோம்.

அயனை முதலாகக் கொண்ட உயர் குடியில் பிறந்தும், ஆயிரம் மறைகளுக்கு உறைகள் அறிந்திருந்தும் தீயினை நயக்கும் செயல் புரிந்தது ஒரு புறம் இருக்கட்டும். அரக்கர்களை சுடுவதற்காக வந்த கற்பின் கனலி, அக்னி தேவனையும் பொசுக்கி, இராகவனின் ஐயத்தையும் சுட்டு எரித்த வளாயிற்றே! இராகவன் எதிரே இராவணன் உள்ளம் கொதித்து வீரமாகப் போராட வேண்டியதாயிற்று. சமர பூமியில் நிகழ்ந்துள்ள நிகழ்ச்சிகளைக் கண்டு அமரர்கள் அஞ்சியிருந்தனர். இராவணன் கை மிஞ்சிவிட்டது என்ற அச்சத்தால் தரும தேவதையே கண் கலங்கினள். தோற்றனன் என்றும் தோற்றம் தோன்றியுள்ள நிலை ஊன்றி பரவி வந்தது. மேகத்தால் சூரியன் மறைந்து போனான் என்றால் அம்மறைவு நெடிது நிற்பதில்லை. விரைந்து நீங்கிப் போகும். இதே நிலைதான் இராகவனுக்கும். தோல்விச் சாயைத் தோன்றவே வானும் வையகமும் மறுக நேர்ந்தன. பூதங்கள் யாவும் சோர்ந்து கலங்கி நிற்க, இமையவரோடு இயய மலையும் அமைதி குன்றி நடுங்கியது.

"விசை தொடு விசாகத்தை நெருக்கி
ஏறினான்
குசன் என மேருவும் நடுக்கம்
உற்றதே"

இங்ஙனம் கிரகம் பீடிக்கும் நிலையைக் கூறுகிறார். விசாக நக்ஷத்திரத்தின் நான்காவது பாதம் விருச்சிக இராசியின் முதல் பாகமாம். அந்த இராசி மண்டலம் செவ்வாய்க்கு ஆட்சி நிலையம். துலா லக்கினத்தைக் கடந்து விருச்சிகத்தின் முன்பாகமாகிய விசாகத்தில் செவ்வாய்க்கிரகம் ஏறும்பொழுது மிகவும் விரைந்து செல்வான். சொந்த வீடு ஆதலால், அந்தவாறு விசைகொடு நசையாகத் தாவுகிறான். அங்ஙனம் தாவுங்கால் அந்த நக்ஷத்திரத்தில் பிறந்துள்ள அரசருக்கு அழிவு நேரும் என்பது கிரகவிதி. இட்சுவாகு மன்னன் விசாக நாளில் பிறந்தவன். ஆதலால் அந்த நக்ஷத்திரம் அவனுடைய மரபினர்க்கு உறவுரிமையாய் வந்தது. குசன் அதில் ஏறியபோது, உண்மையறியாமல் இராமபிரானுக்கு என்ன நேருமோ என்று உலகமே அச்சத்தில் ஆழ்ந்தது. ஆனால் குசன் என்ற செவ்வாய்க் கிரகம் பூமியிலிருந்து பிறந்தது; ஆகையால் பூமிகாரகன் என்றே கூறுகிறார்கள். அங்காரகன், சேய், குருதி, வக்கிரன், பௌமன், நிலமகன், அரத்தன், அழலோன், மங்கலன், ஆரல், உதிரன் என செவ்வாய்க்குரிய பெயர்களில் வேறு எதையும் குறியாமல் குசன் என்று குறித்தது வான மண்டலத்தில் அவன் சஞ்சரித்து வருங்கால், பூமண்டலாதிபதிகளுக்கு நேருகின்ற அழிவு நிலைகளைக் கூர்ந்து அறிய வந்தது.

அழலவன் பௌமன் அங்காரகனே
குருதி வக்கிரன் குசனே மங்கலன்
ஆரல் உதிரன் அரத்தன் அநிவன்
அழலோ லோகிதன் செந்நிவண்ணன்
சேய் இவை செவ்வாய் பெற்ற பெயரே.
—பிங்கலந்தை.

செவ்வாயின் பெயரை பிங்கல முனிவர் இங்ஙனம் குறித்திருக்கிறார். குசன்

---

திரு. கே. வி. இராஜன்,
மதுரை.

---

விசாகத்தில் ஏறியது உலகப்புகழ் பெற்றிருந்த ஒரு சிறந்த அரசன் இறந்துபடுவான் என்பதைக் குறித்து நின்றது. இந்தச் சிறப்பு இலங்காதிபதிக்கே என்பதையறியாமல், இராமன் பால் வைத்த பேரன்பால் உலகமே மயங்க ஏற்பட்டது என்கிறார் கவிஞர் பெருமான். "ஆக்ரம்யா அங்காரகஸ் தஸ் தெள விசாகமபி சாம்பரே" என வால்மீகி முனிவரும் குசன் நிலையை இவ்வாறு விளக்கிக் கூறுகிறார்.

---

ஸ்ரீ நடராஜர்-சுந்திபலலி.
S- V. K. S. ஸ்ரீநிவாசன-திருப்பதி



ஒருவனுடைய ஜன்ம நக்ஷத்திரத்தில் செவ்வாய் சேர்ந்தால் அவனுக்குப் பீடையுண்டாகும் என்பது ஜோதிஷ ஸாஸ்த்திர இலக்கணம். ''பிறந்த நாளும் செவ்வாய்க் கோளும் இறந்து வீழும் வெவ்வாய்க்கேடாம்'' என்பது பழமொழி வழக்காய் வந்துள்ளது. பாஞ்சால தேசத்து அரசனை ஆருணி என்பவன் உதயண மன்னனோடு போராட நேர்ந்த பொழுது செவ்வாய் விசாகம் சேர்ந்த நிலையை கொங்கு வேளீர் நன்கு குறித்தக் குறிப்பு.

''பெய்கழல் ஆருணி பிறந்த நாளுள
செவ்வாய் விருச்சிகம் சென்றுமேல் நெருங்க
ஆற்றல் சான்ற அடல் ஆருணி
ஏற்றோர் யாவர்ஈண்டு வந்து எதிர்க்கெனச்
சீறுத்துப்பிற் சேதியர் பெருமகன்
கழலணி காலினன் கரண யாப்பினன்
நிழலணி நல்வாள் அழல வீசித்
தாங்காரும் காதல் தம்பியர் சூடிய
பூங்கழல் தோழர் புடையுடை யாத்தர
ஒன்னுப் பகையான் உதயணன் என்பேன்
இன்னு மன்ன நின்னுயிர் உணீஇய
வந்தனென் என்றே சென்று மேல் நெருங்க''

—பெருங்கதை.

குசன் விசாகத்தை நெருக்கி ஏறினன் என்றது இதனோடு கூர்ந்து சிந்திக்கத்தக்கது. உரிமையாய் வந்த கிரகம் வலியுடையதானால் எந்த நாளும் இனிய நாளாம். மண் ஆளும் மாரகத்தை விண் வாழும் கோள்கள் விளக்கி வருவது வியப்பாயுள்ளது. அரசர்கள் அதிசய வாழ்வினர், ஆதலால் அவர்களுக்கு அழிவு நேரும் பொழுது அவகுறிகள் வெளியே தெரிய நேருகின்றன. அவர் போரில் ஏகுங்கால் அவை சமயம் பார்த்து நேரிலே ஏறுகின்றன. கொஞ்சமும் கலங்காத நீண்ட நெஞ்சச் செருக்கே இலங்கை வேந்தனை குலத்தோடு அழித்து வருகிறது. தனக்கு நேர்ந்துள்ள கொடிய அழிவுகளை எல்லாம் சிந்திக்காமல் எப்படியாவது எதிரியை வென்று விட வேண்டும் என்று ஆங்காரத்துடன் போர் புரிகிறான். பிறகு காகுத்தனின் கடும்போர் இராவணன் பிடித்திருந்த சிலைகள் பத்தையும் துணடங்களாய் நிலை குலைந்து வீழச்செய்தன. கவசம் உடைந்தது. மார்பிலும் தோளிலும் வாளிகள் விரைந்து பாய்ந்தன.

தரும தேவதையே பருவரலோடு மறுகி உருகி நேர்ந்தமையால் இந்த புண்ணிய வீரனுடைய நிலைமைகளைத் தெரிய முடிகிறது. நன்மையோ தின்மையோ எதிர்பாராத பெரு நிகழ்ச்சிகள் நடைபெறவிருக்கும்பொழுது அவற்றால் உண்டாகும் அதிர்ச்சியைத் தணிப்பதற்காக கனவின்மூலம் கோடியிட்டுக் காட்டுவது இலக்கிய வல்லுனர்கள் கைக்கொள்ளும் உத்தி. கண்ணகி கணவனுடன் மதுரைக்குக் கிளம்புவதற்கு முன்னால், புதியதோர் நகரில் மன்னவன் தவற்றால் மணாளனை இழந்ததையும்அந்தஅவலம் தாங்காது சீறி அரசனையும் அந்நகரையும் அழித்ததையும் கனவில் கண்டாள் என்பார் இளங்கோவடிகள். மாடலன் என்ற மறையோனிடம், கோவலன் தான் கடையாமத்தில் கண்ட தீக்கனவை கூறிப்பொல்லாங்கு நிகழ விருப்பதைச் சொன்னான் என்று சிலம்பு பேசும். இதையே முன்னோடியாக திரிசடை கண்டாள். மண்டோதரிக்கும் உத்பாதங்கள் தோன்றின. சோதிட ஸாஸ்த்திரத்தில் மிக்க வல்லுவனான இலங்கேஸ்வரன் தானே நன்கு தெரிந்திருந்தும் தவறுதல்கள் செய்தான். விருந்தம் என்னும் முகூர்த்தத்தில் சிறையிருந்த செல்வியைச் சிறையில் வைக்கக் கொண்ட வந்த நேரமும் அதுவே; இதையே ஜடாயு, இராகவனிடம் ஏற்கெனவே கூறி அவன் அழிவு காலம் நெருங்கிவிட்டது என்கிறார்.

ஓர் இடத்திற்கும் செல்லக்கூடாது என்ற விதியிருக்கையில், அதை அறிந்தும், தன் நட்சத்திரத்தை அறிந்தும் போரில் சென்று, நன்மை இவ்வுலகில் உண்டாகும் பொருட்டு மாய்கிறான். சிறந்த தத்துவ ஞானியாகிய இலங்கேஸ்வரன், நீண்ட நெடும் பயணம் மேற்கொள்ளும் ஒருவன் இடையில் இளைப்பாற சில நாட்கள் தங்கி மறுபடியும் புறப்படும் பொழுது அவ்இடத்தைவிட்டுப் போகக் கவலைப் படுவதில்லையோ, அதேபோல் இறப்பைக் கணடும் அஞ்சவில்லை.



## ஆர்ஜித தெப்போற்சவம்

திருமலையில் வருடத்தில் மூன்று நாட்கள் நடத்தப்பட்டு வரும் தெப்போற்சவம், இப்பொழுது யாத்திரிகர்களின் விருப்பத்தை நிறைவேற்றும் வகையில், ஒவ்வொருவாரமும், செவ்வாய்க் கிழமைகளில் நடத்தப்பட்டு வருகின்றது. அன்று இறைவன் திருப்பள்ளி ஓடையில் (தெப்பத்தில்) எழுந்தருளி பக்தர்களுக்கு அருள் புரிவார்; ரூ. 1500/- செலுத்தி பக்தர்களும் இவ்வார்ஜித தெப்போற்சவத்தில் பங்கேற்கலாம். பங்கேற்கும் கிருஹஸ்தர்க்கு, ஸ்ரீ வேங்கடேஸ்வரரின் திருவுருவம் பதித்த சுமார் 5 கிராம் எடையுள்ள தங்கப்பதக்கம் ஒன்றும், வஸ்த்ர பஹுமானமும் மேலும் நைவேத்தியமும் வழங்கப்படும். அது மட்டுமன்றி, கிருஹஸ்தரைச் சார்ந்த 10 நபர்கள், இறைவனின் தரிசனத்திற்காக அனுமதிக்கப்படுவர்.

தொடர் கட்டுரை :

அத்தியாயம்–10

விபூதி யோகம்: பகுதி – 8




# கீதை காட்டும் நல்வழி

அண்ட பகிரண்டங்கள் யாவற்றையும் தன்னுள் ஓயாது காலம் விழுங்கிக் கொண்டேயிருக்கிறது. காலப் போக்கில் மலை மடுவாகிறது. மடு மலையாகிறது. காடு நாடாகிறது. நாடு காடாகிறது. பாலை சோலையாகிறது. சோலை பாலையாகிறது. நாமனைவரும் காலத்திற்குக் கட்டுப் பட்டவர்கள். அதாவது காலத்திற்கு அடிமைகள். காலத்தை எதிர்த்து வென்றவர் எவரும் கிடையாது. காலத்தின் அபார வல்லமையை முன்னிட்டே நாம் அதைக் கால தேவனாகவும், மஹா காளீயாகவும் வணங்கி வழிபடுகின்றோம். காலத்தின் கோர சொரூபமாகவே காளீ தோற்றம் தருகிறாள். ரத்தம் சொட்டும் நாக்கு, வாளேந்திய கை, முண்டங்களான மாலை, உக்கிரமான பார்வை—காளியின் இந்த அம்சங்கள் யாவும் அனைத்தையும் விழுங்கி அழித்தொழிக்கும் காலத்தின் செயல்களாகின்றன. காலத்திற்குத் தோற்றமும் முடிவும் கிடையாது. எனவே அது தெய்வாம்சம் பெற்றதாகிறது. பூமி தோன்றி இத்தனை லட்சம் ஆண்டுகள் ஆயின, சூரியன் தோன்றி இத்தனை கோடி ஆண்டுகள் ஆயின, ஒரு குறிப்பிட்ட நட்சத்திரத்திலிருந்து ஒளி பூமியை வந்தடைய இத்தனை ஒளி வருடங்கள் (ஒளியின் வேகமான வினாடிக்கு 1,86,000 மைல் வீதம் ஒரு வருடத்தில் எத்தனை மைல் ஒளி பயணம் செய்யுமோ அது ஒரு ஒளி வருடம் ஆகிறது) ஆகின்றன என்றெல்லாம் நாம் கணக்குப் போடுகின்றோமே அதற்கு முன்னும் பின்னும் காலம் அதீதத்தில் கடந்து போகிறது.

திரு. டி. கே. நாராயணன், M.Sc.,
ஆசிரியர் ''சமய ஜோதி'' மதுரை.

இரண்டு நிகழ்ச்சிகளுக்கு இடைப்பட்ட நேர அளவே காலம் ஆகிறது. அண்டங்களும் அவற்றில் உள்ள அனைத்தும் தோன்றி, இருந்து, மறைவதைக் காலம் முறையாக அளந்து கொண்டே இருக்கிறது. எனவே கணக்கிடுபவைகளுள் காலம் முதலிடம் பெறுகிறது. அத்தகைய காலம் தாமே என்கிறார் பகவான்.

மனிதர்களுள் எவ்விதம் சிறப்பு அம்சங்கள் பெற்றவன் அரசனாக ஆகிறானோ, அதுபோல மிருகங்களுக்கிடையில் சிங்கம் பல சிறப்பான குணங்களைப் பெற்று விளங்குகிறது. அம்பிகையின் வாகனமாக அது விளங்குகிறது. புலனடக்கத்தில் சிங்கம் நிகரற்று விளங்குகிறது. இனப் பெருக்கத்திற்காக மட்டுமே அது புணர்ச்சியில் ஈடுபடுகிறது. புலனடக்கத்தில் மிக மிகக் கீழ்நிலையிலுள்ள மனிதர்கள் பலர் சிங்கத்தைப் பார்த்து புலனடக்கம் பயின்று கொள்ள கடமைப்பட்டிருக்கிறார்கள். சிங்கம் கம்பீரத்திற்கு எடுத்துக் காட்டு. எனவே அத்தகைய தெய்வாம்சம் வாய்ந்த சிங்கம் தமது சொரூபம் என்று பகவான் கூறுகிறார்.

கருடன் விஷ்ணுவின் வாஹனமாக அமைகிறது. எனவே கருடனைப் பார்க்கும் போதெல்லாம் ஈசுவரனின் ஞாபகமும் கூடவே வரும். பூமியிலிருந்து மிக உயரத்தில் வேகமாகப் பறக்க வல்லது கருடன். உயர உயரப் பறந்தாலும் கருடனின் பார்வை பூராவும் பூமியில் கிடக்கும் அழுகிய பிணங்களின் மீதே பதிந்திருக்கும். மேடைகளில் மணிக்கணக்காகக் கேட்டோர் மனத்தை கவரும் விதத்திலே சொற்பொழிவாற்ற வல்ல பலரது நாட்டம் பூராவும் பொருளியல் நாட்டத்திலும் புலனின்பத்திலுமே இருந்தால் அவர்கள் கருடனைப் போன்றவர்களே யாவர். கருடன் நமக்குப் புகட்டும் பாடம் இதுவேயாகும்.

பவன: பவதாமஸ்மி
ராம: சஸ்த்ர பிருதாமஹம் |
ஜஷாணாம் மகரஸ்சாஸ்மி
ஸ்ரோதஸாமஸ்மி ஜாஹனவீ ‖ 31 ‖

'தூய்மைப் படுத்துபவைகளுள் காற்ருகவும், ஆயுதம் பிடித்தவர்களுள் ராமனுகவும், மீன்களுள் மகரமாகவும், நதிகளுள் கங்கையாகவும் நான் இருக்கிறேன'.

பஞ்ச பூதங்களில் நிலம், நீர், தீ, காற்று ஆகிய நான்கும் தூய்மைப் படுத்தும் தன்மையைப் பெற்று விளங்குகின்றன. நீர் கரைப்பதனுலும், தீ எரிப்பதனுலும் பொருள்களைத் தூய்மைப்படுத்துகின்றன. இந்த நான்கிற்கிடையில் காற்றிற்கு தூய்மைப்படுத்தும் தன்மை அதிகம். காற்று எங்கும் வியாபித்திருந்து யாண்டும் பொருள்களைத் தூய்மைப் படுத்த வல்லதாகிறது. நிலம், நீர், தீ ஆகியவற்றையும் காற்று தூய்மைப்படுத்துகிறது. தீ எரிவதற்குக்'காற்று தேவை. நீரை ஆவியாக மாற்றி அதை மழை நீராக ஆககுகிறது. பூமியில் உள்ள துர்நாற்றத்தைக் காற்று அகற்றுகிறது. பகவான் நாமத்தைச் சொல்வதால் நம் மனத்திலுள்ள அசுத்தங்கள் அகலுகின்றன. எனவே காற்றில் தெய்வாம்சம் பொருந்தியிருக்கிறது என்பது தெளிவாகிறது.

வெறும் கையுடன் சண்டை செய்பவனைக் காட்டிலும் ஆயுதத்தைக் கையிலேந்திச் சண்டை செய்பவனுக்கு வலிமை அதிகம். ஏனெனில் அவனது ஆற்றலுடன் ஆயுதத்தின் வலிவும் சேர்ந்து கொள்கிறது. ஆயுதத்தைத் தவருகவோ அல்லது தாறுமாருகவோ கையாண்டால் அது ஒருவனுக்கு இழுக்கை ஏற்படுத்துகிறது. முறையாக ஆயுதத்தைக் கையாள்பவனே சான்ருேனுகிருன். அவனே உண்மை வீரனுகிருன். வீரன் ஆயுதத்தை எங்ஙனம் கையாள வேண்டும் என்பதற்கு ஸ்ரீராமபிரான் நல்லதொரு எடுத்துக் காட்டாக அமைகிருர். அவர் கையிலேந்திய கோதண்டத்தை அவர் ஒரு போதும் தவருகப் பயன்படுத்தியதே கிடையாது. அரக்கர்களையும், தீயோர்களையும் அழிப்பதற்காக

(31-ம் பக்கம் பார்க்க)

# அபிராமி அருட்பா

திருமதி. ராஜலக்ஷ்மி பரமேச்வரன் - பெங்களூர்.

ராகம்: தேஷ்

மறுபடியும் நான் உன்னை தரிசனம் செய்யத்
திருக்கடவூர் வர ஆசை கொணடேன் தேவி (ம)
உன்னைத் தரிசனம் செய்து
உன் சந்நிதியில் அமர்ந்து
அந்தாதி பாட நான் ஆசை கொண்டேன்
பக்தியாய் நான் தொகுத்த
பாமாலை தன்னை உனககுப்
பாடிக் காட்ட நான் ஆசை கொண்டேன் (ம)
என் எண்ணம் ஈடேற
நீ அருள புரிவாய் சுத்த சசி போன்றவளே
தாம்பூல சோபிதே அன்னையே நானுன்னை (ம)

ராகம்: ஸஹானு

அன்னையே அபிராமியே
அமிர்த லிங்கேச்வரர் ப்ரியே
கள்ள வாரண கணபதியைப் பெற்ற
காரிகையே (அ)
பலநாளாய் உன்னை நான்
பாடிப்பாடி அழைக்கின்றேன்
என் குரல் உனக்கு
எட்டவில்லையோ ஆரணங்கே (அ)
கோகிலம் போலவே
குரலும் உடையவளே
கொம்புத்தேன் போலும்
மொழியும் உடையவளே (அ)
ஹம்ஸ நடை அழகுள்ள
அபிராமி தேவியே
திருக்கடவூர் அன்னையே
இங்கு வருவாய் தாயே (அ)

ராகம்: மோஹனம்

அன்னையே இங்கு வருவாய்
எங்கள் அபிராமி (அ)
தில்லையிலே ஆடும் நடன சபேசனுடன்
நவரஸ தாண்டவம் ஆடி மோஹன
ராகம் பாடிய (அ)
சுந்தரியே நீ சொகு சாய் நடை நடந்து
ஸ்வர்ண மணிகள அணிந்து வந்திடுவாய்
அன்ன வாகனம் ஏறி ஆனந்தமாய் ஈசருடன்
அடியார்களுக்கு பக்தி தந்திடுவாய் (அ)
ஆனைமுகனைப் பெற்ற தாயே வருவாயே
ஆறுமுகனைப் பெற்ற தாயே வருவாயே
ஹரி ஹரசுதனைப் பெற்றதாயே வருவாயே
பட்டருக்குக காட்சி தந்த தாயே நீ
பரமானந்தமாய் வருவாயே. (அ)



# வழி கூறும் திருமொழி



பெரியாழ்வார்

பெரியாழ்வார் பாசுரங்கள் திருமொழியெனத் தொகுக்கப்பட்டுள்ளன. ஐயனுக்கே பல்லாண்டு கூறி வாழ்த்தும் விஷ்ணு சித்தர் பரம கருணையோடு நாமெல்லாரும் வாழும் வகையினைத் தம் திருமொழிப் பாசுரங்களில் பகர்ந்தருள்வார். இறைவன் பால் ஈடுபாடு இல்லாது அல்லற்படுவோரைப் பல்வாறும் அழைத்து உபதேசித்தருள்வது அவர் தம் தனி சிறப்பு ஆகும்.

ஐயனின் தொடர்பு இருப்பின், நமக்குக் கிட்டும் நலன்களை விரித்துரைப்பார். ஈசனிடமிருந்து ஒதுங்க நினையின் வரும் இடர்களைக் கூறி நம்மைத் திருத்த முயலுவார். ஐயனின் திருத்தாள் பற்றித் தாம் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம் என்று நம்மிடம் அன்போடு ஆலோசனை வழங்குவார். நோயும் நொடியும் இராமல் வாழுதற்கான வழிகளை விளக்குவார். நமக்காக, இறுதிக் காலத்தில் கைவிடாது காக்குமாறு இப்போதே இறைவனை இறைஞ்சுவார். இப்படியாகப் பல வண்ணமாயும் ஈசனின் திருவடிகளின்பால் நம்மவர் உள்ளங்களை ஈர்க்கப் பெரியாழ்வார் செய்தருளும் முயற்சிகளே அவருடைய திருமொழிப் பாசுரங்கள். சில பாடல்களை இங்கே காணலாம்.

திரு. ர. வெங்கடரத்தினம்,
நெய்வேலி

1

*கடைசிக் காலக் காட்சியைக் கண் எதிரே கொணர்ந்து நிறுத்தி ஆழ்வார் நம்மை அச்சுறுத்தப் பார்ப்பார்!*

*உடலில் புண், ஒரே இரணமாக உள்ளது. நெடுகச் சீழ்கோத்து ஈக்கள் முட்டையிடும் அளவுக்கு வந்துவிடுவிடுகிறது. காயத்தினின்று நீர் வடிகிறது. இதைவிட வேறு வினை வேண்டாம் என்னும் போன்றதொரு நிலை!*

சீயினாற் செறிந் தேறிய புண் மேல்
செற்ற லேறிக் குழம்பிருந்து
எங்கும்
ஈயினா லரிப் புண்டு மயங்கி
யெல்லை வாய்ச் சென்று சேர்வதன
முன்னம்
வாயினால் நமோ நாரணா வென்று
மத்தகத் திடைக் கைகளைக் கூப்பி
போயினால் பின்னை இத்திசைக்
கென்றும்
பிணை கொடுக்கிலும் போக
வொட்டாரே.
*(4-5-2)*

*ஈக்கள் புண்ணில் வந்தமர்ந்து கடித்துத் தொல்லை கொடுக்கின்றன. இத்தகைய இறுதிக் காலத்து வர்ணனையைப் பாடும் பாசுரம், பின் நாலே அடிகளில் அபயம் கொடுத்துத் தடுத்தாட்கொள்ளுதலைக் காண்கிறோம்.*

வாழ்வின் எல்லையைச் சென்றடையும் முன்னர், நாவினால் ஓம் நமோ நாராயணாய என்னும் திவ்விய மந்திரத்தை ஓதவேண்டும். அது மட்டும் போதாது. சென்னி மீது இரண்டு கரங்களையும் பதித்து இணைத்து துதிக்கவும் செய்ய வேண்டும். இவ்வாறு செய்யின், பின் இந்த பூவுலக வாதனைகள் ஒரு போதும் நம்மை அண்டமாட்டா. இத்திசைக்கே ஒரு கும்பிடு என்றவாறு, நாராயண நாமம் சொல்லிச் சிரத்தின் மீது கரங்கோத்துத் துதிக்க வேண்டும். எப்போது?

முன்னதாகவே, நாம் நினைவோடு உடல் நலத்தோடு உள்ளபோதே, வணங்கி வழிபடின், பின் தொந்திரவு ஏதும் இராது. எனவே முன்னம், பின்னை என்ற இரண்டு சொற்களும முக்கியமானவையாம், இப்பாடலில்.

2

*கடைசிக் காலத்தில் யார் எந்த நிலையில் இருக்கப் போகிறோமோ? நினைவு தப்பி நாட்கணக்காகக் கிடந்து தவிக்க வேண்டியவர்கள் நம்மில் எவரோ? கையைத் தூக்கிக் கும்பிடக் கூடத் திராணியற்ற நிலையில் நலிந்து கிடக்கையில், என் செய்வது! அப்போது பார்த்துக் கொள்ளலாம் என்று இப்போது விட்டு வைத்தற்கில்லையே?*

*ஆழ்வார் அந்திமக் காலத்தை நினைந்து, நினைவுள்ளபோதே இறைவனிடம் ஓர் அதிசய வேண்டுகோள் விடுப்பார். திருவரங்கத் திருப்பதியிலே அரவணையில் பள்ளி கொண்ட எம்பெருமானைப் பெரியாழ்வார் வெகு சுவாதீனத்தோடு வேண்டுவார்—அப்போதைக்கு இப்போதே சொல்லி வைத்தேன், அரங்கத்தரவணைப் பள்ளியானே!*



கோகுலாஷ்டமி தினத்தன்று ஸ்ரீ கிருஷ்ணசுவாமி–திருமலை.

நிற்கும்போது, நினைவு தப்பி உயிர் ஊசலாடுகையில் காத்தருள வேண்டும்.

இதுதான் பெரியாழ்வாரின் முன்னேற்பாடு!

3

ஆமாம், இந்த நோயும் நொடியும் இல்லாமல் திடகாத்திரமாக இருக்க முடியாதா? வியாதிகளுக்கு ஆளாகாது வாழ்வதற்கு ஒரு வழியே கிடையாதா! எந்த நோய் எப்போது வந்து தாக்குமோ என அஞ்சி யஞ்சிச் சாகத்தான் வேண்டுமா ? — அப்படி ஏதும் இல்லை.

ஆழ்வார் நோய்களை அகலும்படியாக ஒரு பாசுரத்தில் அருளுவார். இறைவனிடம் சரண போந்து, ஐயனின் திருத்தாளிணையைப் பற்றி நில்லும்போது, நோயும் நொடியும் நில்ல மாட்டா என்று பொருள்பட, அவர் பாடுவார்.

நோய்களையே நேரில் அழைத்துப் பேசுவார்: எம்பெருமானின் திருத்தலங்கள் ஒவ்வொன்றுகத் தரிசனம் செய்துகொண்டு வரும் பெரியாழ்வார், இறைவனின் திருச்சந்நிதானத்தில் நோயும்பிணியும் நணணமாட்டா என்ற இறை யிறுமாப்புடன் மொழிவார். சர்வேசுவரனின் கண்ணெதிரேயே பிணிகள் கொட்டமடித்தலா ? அந்த நோயும் பிணியுமே இறைவன் முன் நோய்வந்து ஒழியும் !

மங்கிய வல்வினை நோய்காள !
உமககு மோா வலவினை கணடீர்
இங்குப் புகேன் மின் புகேன் மின
எளிதனறு கண்டீர் புகேன் மின.
சிஙகப் பிரான் அவன் எம்மான்
சேருந திருக் கோயில் கண்டீர்
பங்கப் படா துய்யப் போமின்
பண்டன்று பட்டினங் காப்பே.
(5-2-4)

நோய்களைப் பெயர்சொல்லி யழைத்து, மரியாதையாய் ஒதுங்கிப் போமின் பழைய ஊரல்ல இது. உங்கள் கொட்டம் இங்கே நடவாது.

நினைவு தப்பி அல்லாடுகையில் எவரும் ஐயனை நினைக்கப்போவதில்லை. கடைசிக் காலத்து இளைப்பு மேலிட்டு மனிதன் தவித்துக் கொண்டு நிற்கும் போது, நிசசயம் இறைவனின் நினைவு உள்ளத்தே எழப்போவதிலலை. உள்ளமே தான் இயங்காத நிலையில் உள்ளதே ?

இவ்வாறு முன்னதாகவே யோசித்து ஆழ்வார் ஈசனை விளித்து முன்னேற்பாடாகச் சொல்லி வைத்துக்கொள்வார், அப்போதைக்கு இப்போதே!

இறுதிக் காலத்துப் போதையில், இறைவன அடியவரைக் கைவிட்டு விடலாகாது என்று ஆழ்வார்க்கு உயிர்த் துடிப்பு! தமக்கு இறைவனிடம் ஒட்டிக்கொள்ளத் தகுதி ஏதும் இல்லையெனினும், முன்பு கஜேந்திரன் என்னும் ஆனைக்குக் கடைசித்தருவாயில் கனிவுடன் அருளிய எம்பெருமான் என்ற காரணம் பற்றித் தானும் பெருமை மிக்க ஈசனின் திருவடிகள் பற்றுவதாக ஆழ்வார் பாடுவார். இங்கு விஷ்ணு சித்தர் ஓர் உண்மையை அழகாகச் செப்புவார். கடவுளைப் பற்றுதற்குக் காரணம், காத்தருள்வார் என்ற ஆசையே ஒழிய, வேறில்லை.

துப் புடையாரை யடைவ தெல்லாம
சோர் விடத்துத் துணை யாவர்
எனறே
ஒப்பிலேன் ஆகிலும நின் அடைந்
தேன்
ஆனைக்கு நீ அருள் செய்தமையால்
எய்ப்பு என்னை வந்து நலியும் போது
அங்கு
ஏதும நான் உன்னை நினைகக
மாட்டேன்
அப்போதைக் கிப்போதே சொல்லி
வைத்தேன்
அரங்கத் தரவணைப் பள்ளியானே.
(4-10-1)

அந்த ஆனைக்கு இணையானவன்நான் எனக் கூறிக் கொள்ளவில்லை. எனினும், சோர்ந்து கிடக்கும் பொழுது காத்தருள்வதுதானே ஈசனின் சிறப்பு? அப்போது, துணையாவர் என்றே இறைவனை நாளும் பணிவது? நலிந்து

பிழைக்கும் வழி ஒன்று சொல்கிறேன். வந்த வழியே நடையைக் கட்டுமின், எம்பெருமான், சிங்கப் பெருமான் திருக்கோயில் கொண்டு காத்தருளும் திருத்தலம் இது. நல்ல வண்ணம் தப்பியோடுமின்!

இவ்வாறு பழம் பிணிகளை ஆழ்வார் எச்சரித்து அவை பிழைத்துப் போகவும் வழி பகர்ந்தருள்வார். பழைய வீரியம் யாவும் குன்றிப்போனமையின், அவர் மங்கிய வல்வினை நோய்காள் எனக் கூறுவார். எனவே, நோயும் பிணியும் நீங்கி வாழ்தற்கான வழி இறைவனின் திருத்தலங்களை நண்ணிச் சேவித்திருத்தலே என்பது நமக்கு ஆழ்வார் காட்டும் குறிப்பு!

4

எம்பெருமான் திருநாமம் இறைஞ்சி எப்போதும் அந்நாமம் நெஞ்சில் நிலைத்து நிற்க வழி கூறும் பாசுரங்கள் எவ்வளவோ உண்டு. எளிதானதொரு வழி, தம் மக்களுக்கு ஈசன் திருப்பெயரைச் சூட்டுதல் ஆகும்? கண்ட பெயர்களையும் சூட்டிக் காலத்தை அவமே போக்காது, தெய்வத் திருநாமங்களைச் சூட்டி இறைச் சூழலில் தெய்வீக வாழ்வு நடத்தலாம்.

மனித வாழ்க்கையெனும் இழி பிறப்புத்தான் எடுத்து விட்டோம். அதற்காக, வர வர இன்னும் கீழேயே போய்க் கொண்டிருக்க வேண்டுமா என்று ஆழ்வார் சாடுவார். தெய்வத் திருநாமம் சூட்டி இறைப் பொலிவுடன் வாழலாகாதா என அங்கலாய்ப்பார். மண்ணிற் பிறந்து மண்ணோடு மண்ணாகப் போகப் போகிறோம் என்பதனால், நிலைத்து நில்லாத அவப் பெயர்கள் தாம் இட்டு மடிந்து சாக வேண்டுமா என்று வெகுக் கோபத்தோடு ஏசுவார். நாராயணனின் நாமங்களில் எதனையேனும் வைத்து நல்ல வழிக்கு வகை நாடாது, இம்மை மறுமை இரண்டையும் கெடுத்துக் கொள்ள வேண்டுமா என்று ஆழ்வார் உள்ளம் துடிப்பார்.

திருமாலின் திருப்பெயர்களை விடுத்து வேறு பெயரிட்டு அழைத்தலைக் கண்டு ஆழ்வார் சீறுவார.

நம்பி பிம்பியென்று நாட்டு மானிடப் பேரிட்டால் நம்பும் பிம்புமெல்லாம் நாலு நாளிலழுங்கிப்போம். செம்பெருந் தாமரைக் கண்ணன் பேரிட்டழைத்தக்கால் நம்பிகாள் நாரணன் தம்மன்னை நரகம் புகாள். (4-6-8) பேரைப் பார் பேரை! நம்பியாம்-பிம்பியாம்! நம்பியும் பிம்பியும் நாலே நாளில் நம்மையெல்லாம் விட்டுப்போம். ஒழுங்காக, நாராயணன் திருநாமத்தைச் செந்தாமரைக் கண்ணன் என்று சூட்டி அழைத்தால், நல்லது!

ஆழ்வார் இந்தப் பாசுரம் நெடுக வெகுச் சீற்றத்தோடு பேசுவார். நங்கைகாள் என்று குழந்தைகளை ஈன்றெடுக்கும் தாய்மாரை அழைத்து, பெறத் தெரிகிறதே-பேர் இடத் தெரிவேண்டாவோ என ஏசுவார். உச்சியில் எணணெயும் சுட்டியும் வளையும் முகந்து கொஞ்சிச் சீராட்டினால் போதுமா, நல்ல நாராயணன் நாமத்தைச் சூட்ட வேண்டாமா என்று வினவுவார்.

வீட்டில் பத்துப் பிள்ளைகள் பிறந்து விட்டனவே எனலாம். அப்படியும், நம்பெருமான் நாமங்களுக்கா பஞ்சம்? வரிசையாக வைக்கலாமே-நாராயணன், சிரீதரன், கேசவன், மாதவன், கோவிந்தன், தாமோதரன், என்று? ஆழ்வார் பாட்டுக்குப் பாட்டுப் பெயர் ஒன்றினைக் கூறி, அன்னையரிடம் அப்பெயர்களை மக்களுக்குச் சூட்டலாமே எனப் பரிந்துரைப்பார். சர்வேசுவரன் நாராயணன் திருநாமம் செப்பியழைத்தீர்கள் எனில், நரகம் புக மாட்டீர்கள் என்பார். புத் எனும் நரகம் தப்புதற்குப் பிள்ளையை ஈன்றால் போதும் என்பர். இங்கு ஆழ்வார் மேல் ஒரு படி சென்று, அப்புத்திரனுக்குத் திருமாலின் திருநாமம் சூட்டினால், வைகுந்தம் கிட்டும் என்பார்!

5

இறைவன் திருநாமத்தை ஆச்ரயிப்போர் பரம புண்ணியசாலிகள் என்பது ஒருபுறம் இருக்க, எம்பெருமானின் திருநாமம் சொல்லாதார் பாவம் செய்தவர் எனலாம். நம் பெரியாழ்வார் இறைத் திருநாமத்தில் ஈடுபாடு இல்லாத மானிடரை ஒரு தனியான சாதியாராக ஒதுக்கி வைப்பார். அத்தகையோர் உடுத்தும் உடை பாவம் செய்தது, அவர்கள் அருந்தும் பானமும் பாவம் செய்தது எனறுகூறுவார்.

பாசுரம் திருக்கோட்டியூர் திவ்வியப் பிரபாவம் கூறும்.

**உரகமெல்லணையான் கையில்**
**உறை சங்கம் போல் மடவன்னங்கள்**
**நிரை கணம் பரந்தேறும் செங்**
**கமல வயல் திரு கோட்டியூர்**
**நரகநாசனை நாவிற் கொண் (டு)**
**அழையாத மானிட சாதியார்**
**பருகு நீரும் உடுக்கும் கூறையும்**
**பாவஞ் செய்தன தான் கொலோ.**
*(4-4-4)*

பாம்புப் படுக்கையில் மெத்தென்று பள்ளி கொண்ட பரந்தாமன் திருக்கையில் உள்ள தூய வெண் சங்கு போன்ற அழகு மிக்க அன்னங்களும் பசுக் கூட்டங்களும் நிறைந்து காட்சி தரும் செந்தாமரைத் தடாகங்கள் திருக்கோட்டியூரின் இயற்கையழகினை அறிமுகம் செய்வன. அத்தலத்தே எழுந்தருளியிலங்கும் பாவம் போக்கும் பரமனை நாவால் நவின்றேத்தி வணங்காத மனித இனத்திற்கு நீர் என்ன கேடு; உடைதான் எதற்கு?

நரகநாசன் என்று ஆழ்வார் ஐயனை அழைத்து, நரகாசுரனை வதம் செய்தமையினை நினைவூட்டுவார்; உடன் நரகத்தையே நாசம் செய்பவர் பரமன் என்றும் நமக்கு உபதேசிப்பார்!

6

நாம் யாவரும் நல்லவாறு வாழ்தல் வேண்டும் என்ற நாட்டம் பெரியாழ்வார்க்கு நிரம்ப உண்டு. கடைசிக்

காலத்தே நினைவு இழந்து தவிக்கும் போது, நாரணத் திருநாமம்தான் காத்தருளும் என்று கண்டோம். இறுதிக்காலம் எப்படி அமையுமோ, கைவிட்டு விட வேண்டாம் என்று நன்முக உள்ளபோதே முன்னேற்பாடு செய்து கொள்ளலைப் பார்த்தோம். நோய்-நோய் என்று அஞ்சி நடுங்காது, இறைவனின் திருப்பதிகளில் ஒன்றி நின்று இன்பமாக வாழும் வகை உணர்ந்தோம். இத்தகைய இறை யானந்தத்தில் திளைக்கத்தான் திவ்விய நாமங்களை நம் மக்களுக்குச் சூட்டி அழைக்க வேணடும் என்ற சூட்சமம் கண்டோம். இவ்வளவும் சொல்லி யான பின்னரும் ஈசன் நாமம் கூறி வணங்காதவர்கள் ஒதுங்கி நிற்றற் குரிய பாவியர் கூட்டம் ஆவர்!

இப்படி அனைத்தும் கூறும் பெரியாழ் வார் திருமொழியின் கடைசிப் பகுதி யான 5ம் பத்து, 4ம் திருமொழி, எம் பெருமானை உள்ளத்தே பற்றி ஆழ் வார் பெற்ற நலன்களை நவிலும். இறைவனை வாய் திறந்து உட் கொண்டு, பருகி அமுதம் எனத் தம் முள் நிறைத்துக் கொண்டுவிட்டவர், விஷ்ணுவைச் சித்தத்துள் நிலை நிறுத் திய பெரியாழ்வார். கடலில் விளைந்த அமிர்தம் அன்று கலசத்தை நிரப்பி ஞற் போன்று, உடல் உருகி மனம் நெகிழ்ந்து இறையடி பணிந்தே ஆழ் வார் இன்று இறைவனைத் தம்முள் நிறைத்துக் கொண்டு நிற்பவர்.

கடல் கடைந்தமுதம் கொண்டு
கலசத்தை நிறைந்தாற் போல்
உடலுருகி வாய் திறந்து மடுத்(து)
உன்னை நிறைத்துக் கொண்டேன்
கொடுமை செய்யும் கூற்றமும் என்
கோலாடி குறுகப் பெரு
தடவரைத தோட் சக்ரபாணீ
சாரங்கவிற் சேவகனே. *(5-4-4)*

தயவு தாட்சண்யம் இன்றிக் கொடி யவன் எனப் பேர் பெற்ற கூற்றுவனும் என் முன் எதிரே நில்லான்; அவன் ஆட்சி இங்கு நடவாது - அகன்று திண்மையோடு விளங்கும் திருத் தோளழகனுகிய சக்கரபாணியை-சாரங்கம் எனும் வில்லேந்திய வீரனைத் துணையாகக் கொண்ட பெரியாழ் வார்க்கு இயம பயம் இலவலேசமும் இல்லை.

இப்பாசுரத்தில் ஆழ்வார் இறை யருளினுல் தாம் பெற்ற நலன்களை முற்றும் கூற இயலாது, சுருங்கக் கூறி முடிப்பார். தமக்குக் கிடைக்கப் பெற்ற இறை நலன்கள் வேறு எவர்க்குக் கிட்டியுள்ளன என்று கேட்டு, மனம் உகப்பார்.

நின்னுளேனுய்ப் பெற்ற நன்மை இவ்வுலகினில் ஆர் பெறுவார்?—இது ஆழ்வாரின் மன நிலையைச் செப்பும் அடியாகும். தம்மை விட மிகுதியான நன்மைகள் பெற்றவர் எவரும் இலர் என்னும் உறுதி, ஆழ்வாரின் ஆழ்ந்த பக்தியில் பிறந்த கோட்பாடு ஆகும். அப்படி அவர் பெற்ற நன்மை இவ் வுலகினில் யாது எனின், இறைவனை உள்ளத்தே கொண்டமைதான் ஆகும்!

✱

*Statement about ownership and other particulars about*

## SAPTHAGIRI
## (MONTHLY)

FORM IV
(*See Rule* 8)

| | | | |
|---|---|---|---|
| 1 | Place of publication | ... | TIRUPATI |
| 2 | Periodicity of its publication | .. | Monthly |
| 3 | Honorary Editor | ... | Sri P. V. R. K PRASAD, I.A.S. Executive officer, T.T.D |
| 4 | Printer's Name (Whether citizen of India) Address | ... | Sri M. Vijayakumar Reddy Yes Manager, T.T.D. Printing Press, Tirupati. |
| 5 | Editor & Publisher's Name (Whether citizen of India) Address | ... ... | K. Subba Rao, M.A, Yes Editor, T.T.D. Sapthagiri Journal, Tirupati. |
| 6 | Names and addresses of individuals who own the newspaper and partners or shareholders holding more than one percent of the total capital. | ... ... | Tirumala Tirupati Devasthanams represented by its Executive Officer T. T. D. Tirupati. |

*I, K. Subba Rao, hereby declare that the particulars given above are true to the best of my knowledge and belief.*

TIRUPATI,
*Date*: 26-2-1979.

(*Sd.*) K. SUBBA RAO,
EDITOR & PUBLISHER,
*Tirumala Tirupati Devasthanams, Tirupati.*

# திருவல்லிக்கேணி

திரு. S. V. வைத்தியநாதன்,
சென்னை - 28.

புண்ணிய பாரதத்தில் வானளாவிய கோபுரங்களும் நிலமளாவிய திருக்கோயில்களும், கண்ணளாவிய திருவிழாக்களும் நிறைந்த பல புண்ணிய க்ஷேத்திரங்கள் இருக்கின்றன. அதிலும் குறிப்பாக தமிழ்நாட்டில் இத்தகைய சிவாலயங்களுக்கும் விஷ்ணு ஆலயங்களுக்கும் குறைவில்லை. அவைகளில் விஷ்ணு ஆலயங்களை எடுத்துக் கொண்டால், புராணப் புகழ் பெற்றவை, முனிவர்களால் ஏற்படுத்தப் பட்டவை, தாமே தோன்றியவை, அபிமானம் பெற்ற ஸ்தலம், திவ்ய ஸ்தலம் என்று இப்படி பல வகையுண்டு. இதில் திவ்யப்பிரபந்தம்பாடிய ஆழ்வார்களால் மங்களா சாஸனம் பண்ணப்பட்ட தலங்களை ''திவ்ய தேசங்கள்'' என்று கொண்டாடுகிறார்கள். இந்த வகையில் குறிப்பாக 108 திவ்ய தேசங்கள் இருக்கின்றன.

ஆழ்வார்கள் நாவில் புகுந்து புறப்பட்ட இடங்களிலெல்லாம் நாமும் புகுந்து புறப்பட வேண்டும் என்பர் பெரியோர்.

ஆனால் இம்மாதிரி ஏதாவதொரு க்ஷேத்திரங்களுக்கு யாத்திரை போகும் முன் அது பாடல் பெற்ற தலமா, யாராவது மகான்கள் அங்கே அவதரித்திருக்கிறார்களா, ஸ்தல மாகாத்மியம் என்ன, எனபதை யெல்லாம் தெரிந்து கொண்டு சென்று வந்தால் அந்த அனுபவமே தனிதான். விஷயம் தெரியாமல் சென்று வந்தால், 'ஏதோ போனோம், பார்த்தோம், வந்தோம்' என்றுதானிருக்கும். விஷயம் தெரிந்து சென்றால் ஒவ்வொரு சன்னிதியிலும் போய் நிற்கும்போது, 'ஆகா! இந்த இடத்தில்தான் இந்த நிகழ்ச்சி நடந்ததா, இந்த எம்பெருமான் தான் இந்த திருவிளையாடலைச் செய்தாரா' என்றெல்லாம் நினைவிற்கு வர, உள்ளத்தில் பக்திப் பெருக்கெடுத்து, மெய் சிலிர்ப்பதையுணரலாம்.

அநத அளவிலே, ஒரு புகழ்பெற்ற திவ்விய தேசத்திற்கு, அதன் ஸ்தல மகாத்மியத்தோடு சென்று எம்பெருமானைத் தரிசித்து வரலாம், வாருங்கள்.

கண்ணன் விளையாடிய பிருந்தாவனம் வட நாட்டிலிருக்கிறது. அது போல் தென்னாட்டிலும், அதிலும் தருமமிகு சென்னையில் ஒரு பிருந்தாவனம் உண்டு. அதுதான் இன்றைய 'திருவல்லிக்கேணி'! ஆம், தலபுராணத்தில் இது 'பிருந்தாவனக்ஷேத்ரம்' என்று தான் குறிப்பிடப்பட்டிருக்கிறது.

மேலும், இந்தத்திவ்விய தேசத்திற்கும் திருமலைக்கும் மிகுந்ததொரு தொடர்பு உண்டு. என்னவென்றால், திருமலையில் இருக்கும் ''வேங்கட

ருக்மணி சத்யபாமாயுடன் ஸ்ரீபார்த்தசாரதி சுவாமி,
ஸ்ரீ கோவிந்தராஜ சுவாமி கோயில்-திருப்பதி.



நாதன்'' தான் இங்கே குடிகொள்ள வந்துவிட்டார்! என்ன? திருவல்லிக் கேணியில் வேங்கடநாதனா? பார்த்த சாரதியல்லவோ? என்றால்; இல்லை; வேங்கடநாதன் தான்! எப்படியென் பதை, இக்கட்டுரையில் தெரிந்து கொள்வோம்.

இந்தத் திருவல்லிக்கேணி, வைணவ திவ்விய தேசங்கள் 108-ல் தொண்டை நாட்டிலுள்ள 22 திருப்பதிகளில் 21-வதாகக் கருதப்படுகிறது. மயிலை யிலேயே அவதாரம் செய்த பேயாழ் வார் ஒரு பாசுரத்தாலும், திருமழிசை யாழ்வார் ஒரு பாசுரத்தாலும், திரு மங்கையாழ்வார் ஒரு பதிகத்தாலும் மங்களாசாஸனம் செய்திருக்கின்றனர்.

தலபுராணத்தில் இத்தலத்து அருமை பெருமைகளை எடுத்துக் கூறு வது ஒருபுறம் இருக்கட்டும். சாதாரண மாகப் பார்க்கும் பொழுதே ஒரு உண்மை புலப்படும். மகாவிஷ்ணு எடுத்த அவதாரங்கள் பத்து. ஒவ் வொரு அவதாரத்திலும் அவர் கொண்ட கோலங்கள் பல; அதில் பார்த்தனுக்குச் சாரதியாயிருந்து தேரோட்டியது ஸ்ரீ கிருஷ்ணவதாரத் தில். கிருஷ்ணனுக்கென்று பல கோயில் களிருந்தாலும் பார்த்தசாரதிகோலத் திற்கென்று உள்ள ஒரே ஒரு கோயில் திருவல்லிக்கேணியில் தான்! இது ஒன்றே போதுமே!

போதாதற்கு இன்னுமொரு அற் புதமான விசேஷமும் உண்டு. அதா வது, இந்தக் கோயிலில் நுழைந்து ஒரு முறை வலம் வந்துவிட்டால் எவ் வளவு புண்ணியம் கிடைக்கும் தெரி யுமா? ஸ்ரீரங்கம் சென்று ரங்கநாதனை யும், திருமலை சென்று வேங்கட நாதனையும், காஞ்சி சென்று வரத ராஜனையும், அஹோபிலம் சென்று நரசிம்மனையும், அயோத்தி சென்று ஸ்ரீராமனையும் கண்டு வலம் வந்து வணங்கினால் எவ்வளவு புண்ணியம் கிடைக்குமோ, அவையனைத்தையும் ஒரே 'லாட்'டில் இந்தக் கோயிலை ஒரே ஒருமுறை வலம் வருவதன் மூலம் பெற்றுவிடலாம்! ஆம். இந்தப் பஞ்ச மூர்த்திகளும் திருவல்லிக்கேணி பார்த்தசாரதி கோயிலில் எழுந்தருளி சேவை சாதித்துக் கொண்டிருக்கிறார் கள்.

ஒவ்வொரு மூர்த்தியும் இங்கே எழுந் தருளியதற்கான காரணம் பிரம்மாண்ட புராணத்தில் இந்த க்ஷேத்திர ஸ்தல புராணம் கூறுமிடத்தில் விரித்துரைக் கப்பட்டிருக்கிறது.

இனி ஆலய தரிசனத்திற்குச் செல்ல லாம். கோயிலுக்கு முன்னால் பெரிய திருக்குளம் ஒன்று உண்டு. நடுவில் நீராழி மண்டபத்துடன் கூடிய இதையே ''கைரவிணீ புஷ்கரணி'' என்று கூறுகிறது ஸ்தல புராணம். இந்திர, சோம, மீன, அக்னி, விஷ்ணு என்ற ஐந்து தீர்த்தங்களால் சூழப் பட்டது என்றும், கங்கையை விட புனிதமானது என்றும் கூறுகிறது. இக் குளத்தில் மீன்களே வசிப்பதில்லை! இதற்கு ஒரு கதையுண்டு. கண்வரிஷி யினுடைய குமாரர் முத்கலர் பல ரிஷி களோடு கைரவிணீயில் ஸ்நானம் செய்து தவஞ்செய்து கொண்டிருக்கை யில் குளத்திலிருந்த மீன்கள் ஆர வாரம் செய்து இடையூறு விளைவித் தனவாம். உடனே அவர் 'இந்த மீன் களெல்லாம் நாளை உதயத்திற்குள் வேறோரிடம் சென்று விட வேண்டும்' என்று உத்தரவிட்டாராம். அன்று முதல் இக்குளத்தில் மீன்களே கிடை யாதாம்!

குளத்தின் மேற்குக் கரையில் கோயில் அமைந்திருக்கிறது. முதலில் ஒரு நாலு கால் மண்டபம். அதையடுத்து 36 கால்கள் கொண்ட மற்றொரு மண் டபம். இதற்கடுத்து ஐந்தடுக்கும் ஏழு கலசங்களும் கொண்ட மற்றொரு ராஜ கோபுரம் நம் கண்ணைக் கவருகிறது. உள்ளே நுழைந்ததும், துவஜஸ்தம் பத்தினடியில் விழுந்து வணங்கி அங் குள்ள கருடாழ்வாரை தரிசித்துக் கொள்ளுகிறோம். வலது பக்கம் உள்ள மண்டபம்தான் திருவாய்மொழி மண்டபம்.

அடுத்துள்ள வாயிலைக் கடந்து சென்றால் வலதுபுறம் பெரிய மண டபத்தில் தெற்கு நோக்கி ஆளவந் தார் சன்னிதியிருக்கிறது. மேலும இரண்டு மூன்று படிகளேறினால் மற் றொரு மண்டபம். இங்கேயும் தெற்கு நோக்கி, மணவாள மாமுனிகள், ராமானுஜர், வேதாந்தாச்சாரியார், திருக்கச்சி நம்பிகள், இவர்களுக்குத தனித் தனிச் சன்னிதிகள் இருக்கின் றன. அடுத்து, பெருமாள் சன்னிதி முன் மணடபத்தின் நுழை வாயிலில் இரு புறமும் உள்ள துவார பாலகர் கள் நம் கவனத்தை இழுப்பார்கள். பத்துப் பன்னிரண்டு அடிக்கும் மேலி ருக்கும் பெரிய கம்பீரமான சிலைகள்.

இந்த வாயிலிலிருந்து தெற்குப பிராகாரத்திற்குச் செல்ல ஒரு வழி யுண்டு. நாமும், பார்த்தசாரதியைச் சேவிக்கும் முன்பு பிராகாரம் வலம் வந்து மற்ற சன்னிதிகளையும் தரிசித்து விடலாம்.

தெற்கு பிராகாரத்தில் அமைந் துள்ளது தாயார் சன்னிதி. தாயார் திருநாமம் வேதவல்லி. ரங்கநாதர் திருவல்லிக்கேணிக்கு எழுந்தருளக் காரணமாயிருந்த தேவி!

இந்த இடத்தில் ஒரு விஷயம் சுவா ரஸ்யமானது.

வழக்கமாக, வைஷ்ணவக் கோயில் களில் யார் பெயரால் கோயில் வழங் கப்படுகிறதோ அந்தப் பெருமாள் பிர தான மூர்த்தியாக பிரதான மூலஸ் தானத்திலிருப்பார். அவரது பத்தினி பிராகாரத்தில் 'தாயார்' சன்னிதியி லிருப்பாள். உதாரணத்திற்கு, ஸ்ரீரங் கத்தில் ரங்க நாதன் - ரங்க நாயகி, காஞ்சியில் வரதராஜன் பெருந்தேவி, திருவள்ளூரில் வீரராகவன்-கனகவல்லி இப்படி அமைப்பு. ஆனால் இந்த முறையை இந்தக் கோயிலில் 'அப்ளை' (apply) செய்து பார்த்தால் சரிப்பட்டு வராது! எப்படி யென்றால், இங்கே பிரதான மூர்த்தி யார்? பார்த்தசாரதி. அப்படியென்

ருல், மேற்சொன்ன முறைப்படி இவரது பத்தினி தானே பிராகாரத்தில் 'தாயார்' சன்னிதியில் இருக்க வேணடும்? ஆனுல் பார்த்தசாரதிதான் தன் பத்தினியான ருக்மிணியை தனிச் சந்நிதியில் வைக்காமல் தன் அருகிலேயே (அதே கருவறையில்) வைத்துக் கொண்டிருக்கிருரே! அப்படியென்ருல், இந்த வேத வல்லித் தாயாரின் 'பர்த்தா' யார் என்று கேட்கத் தோன்றுகிறதல்லவா? இதையறிந்து கொள்ள இங்குள்ள பட்டாச் சாரியர்களைக் கேட்க வேண்டும். அல்லது தல புராணத்தைப் புரட்ட வேண்டும்.

பார்த்தசாரதி கருவறை முன் மண்டபத்தில் கிழக்கு நோக்கி ஒரு பெருமாள் படுத்துக் கொண்டிருக்கிருரே, அவர்தான் இந்த வேத வல்லியின் 'பர்த்தா'. ஆக, தலபுராணப்படி இந்த 'பெருமாளு'க்கும் வேத வல்லித் 'தாயா'ருக்கும் சம்பந்த முண்டே தவிர, பார்த்தசாரதிக்கும் வேத வல்லிக்கும் சம்பந்தம் கிடையாது. சரி, சயனித்துக் கொண்டிருக்கும் இந்தப் பெருமாள் யார்? எப்படி வேத வல்லியை மணந்து கொண்டார் என்பதையெல்லால் அந்தச் சன்னிதிக்கு வரும்போது பார்க்கலாம்.

இப்போழுது நாம தாயாரை சேவித்துக் கொணடிருக்கிறேம். சர்வாங்க சுந்தரியாய் கண் கொள்ளாக் காட்சியாக திவ்ய சேவை. சந்நிதியை விட்டு நகர மனம் வருவதில்லை. மற்ற இடங்களையும் பார்கக வேண்டுமே. ஒருவாருக வெளியே வந்து தெற்கு வழியாக இறங்குகிறேம்.

பிராகாரத்தின் தென்மேற்கு மூலையில், இக்கோயிலில் உள்ள பஞ்ச மூர்த்திகளில் ஒருவரான வரதராஜ பெருமாள் எழுந்தருளியிருக்கிருர். அத்திகிரி வரதனல்லவா, பத்துப்படி ஏறித்தான்பார்க்கவேணடும்; சன்னிதி சிறிது உயர்ந்து அமைந்திருக்கிறது. வாசலில் துவார பாலகர்கள் இருக்கிருர்கள். வரதர் உபய நாச்சிமார்களோடு காட்சியளிக்கிருர்.

சப்தரோமா என்ற ரிஷியினுல் ஸ்தாபனம் செய்யப்பட்டு வெகுகாலம் அவரால் ஆராதிக்கப்பட்டு முடிவில் அவருக்கு பரமபதம் வழங்கிய பெருமாள் இவர். அன்று முதல் இன்று வரை,'வரதராஜ'ஞகப் பிரகாசித்துக் கொண்டிருக்கிருர்.

ஸ்ரீ ரங்கநாத சுவாமியின் கலாவாஹனம்,
ஸ்ரீ கோவிந்தராஜ சுவாமி கோயில்-திருப்பதி.



அவரைவணங்கி விட்டு பிரதக்ஷிணமாக வந்து மேற்குப் பிராகாரத்தில் வரும் போது தாயார் சன்னிதி பின் கோஷ்டத்தில் ஒரு அம்மன் இருப்பதைக் காணலாம். இதற்கு நேரே கிழக்கு நோக்கி திருமழிசையாழ்வார் சன்னிதியிருக்கிறது.

அடுத்து நாம் வணங்க வேண்டியா பஞ்ச மூர்த்திகளில் இரண்டாமவரான நரஸிம்ஹனைத்தான். தெள்ளிய சிங்கர் என்ற பெயரோடு மேற்கு பிராகாரத்தில் பார்த்தசாரதியின் கர்பக் கிருஹத்திற்குப் பின்னுல் மேற்கு நோக்கி யோக நிலையில் இருக்கிருர் இவர். இந்த பிருந்தாரண்ய க்ஷேத்திரத்தில் அத்ரி மஹரிஷிக்குப் பிரத்யக்ஷம் ஆனதாக ஸ்தலபுராணம் கூறுகிறது. வாயிலில் துவார பாலகர்கள் நிற்கிருர்கள். சந்நிதிக்கு மேலேயுள்ள விமானத்திற்கு ''தைவிக விமானம்'' என்று பெயர். இவரைத் தான் திருமங்கையாழ்வார்,

''பிள்ளையைக்கிறி வெகுண்டு தூண்
புடைப்ப
பிறை எயிற்று அனல்விழிப் பேழ்வாய்
தெள்ளிய சிங்கம் ஆகிய தேவை
திருவல்லிக்கேணி கண்டேனே''

என்று பாடுகிருர். இந்தத் தெள்ளிய சிங்கர் தான் 'துளசிங்க'ராக மக்கள் நாவில் இடம் பெற்றிருக்கிருர். தற்போது சன்னிதிக்கும் பிராகாரத்திற்கும் வெளியே ஒரு சிறிய ராஜ கோபுரம் இருக்கிறது. அதையொட்டியிருக்கும் தெரு 'துளசிங்கப் பெருமாள் கோயில் தெரு' என்றே அழைக்கப்படுகிறது.

இந்தத் தெள்ளிய சிங்கரை வணங்கி விட்டு வடமேற்கு மூலையில் ஆண்டாள் சந்நிதிக்கு வருகிறேம். கிழக்கு நோக்கி யிருக்கிருள் ஆண்டாள். இந்த சன்னிதி பக்கத்திலிருந்து பார்த்த சாரதியின் கர்பக்கிருஹ விமானம் சேவையாகிறது நன்ருக. ஆண்டாள் சந்நிதியிலிருந்து வடக்குப் பிராகாரம் முழுவதும்'அடைத்து'மண்டபம்தான்.

(22-ம் பக்கம் பார்க்க)

# பக்தி நெறி



ஸ்ரீ வேங்கடேஸ்வரர்-திருமலை.

பக்தி எனபது பகவானிடத்தில் செலுத்தப்படும் அன்பாகும். ''அநிர் வசனீயம் ப்ரேமஸ்வரூபம்'' என்றார் நாரதர். அதாவது இவ்வன்பின் இயல்பை உரைக்கக் கூடியதன்று என்பதாகும். இவ்வன்பு உணடாகும் போது பகவானைப் பற்றிய சிந்தனை உணடாகுகிறது. இவ்வன்பு முதிரும் போது இறைவனைப் பற்றிய நினைவு இடைவிடாது பக்தனின் உள்ளத்தில் நிகழ்கிறது. இத்தகைய பக்தி அழியாத் தன்மையுடையது. இது தானாக இயல்பாக வருவது; அடக்கினும் அடங்காதது. இதைப் பெற்றவன் அழிவில்லாதவனாகிறான். ஆசையும், சோகமும், துவேஷமும் அவனை விட்டு நீங்குகின்றன. அவன் சாந்தி அடையப் பெறுகிறான். இடையிடையே மெய் மறந்தவனாகப் பேரின்பத்தில் திளைக்கிறான்: உணர்ச்சிவயப்பட்டு ஆனந்தக்கண்ணீர் சொரிவான்.

இறைவனிடத்து அன்பு செலுத்துதல் இயல்பாயினும் மனத்திலுள்ள மாயையின் செயலால் அது மறைவு பட்டுக் கிடக்கின்றது. இவ்அழுக்கை நீக்குவதற்கு ஒன்பது வகையான செயல்களை நமது சாஸ்திரங்கள் விதித்துள்ளன. அவை பின்வருமாறு;

**ஸ்ரவணம் :**

இறைவனிடத்து நமக்கு அன்பு உண்டாக வேண்டுமாயின் முதன் முதலாக அவனது பெருமையையும் குணங்களையும், அவைகளை விளக்கும் செயல்களையும் பற்றித் தெரிந்தவர்கள் சொல்ல நாம் கேட்க வேண்டும். இதுவே ஸ்ரவனம் என்பது.

**கீர்த்தனம் :**

இறைவனது குணஙகளை யெல்லாம் சுருக்கமாக உணர்த்தும் அவனது பல் வேறு நாமங்களை நாம் சிந்தனையோடு வாய்விட்டு உரைத்தல் வேண்டும். இதுவே நாம பஜனை, நாம கீதம் என்றெல்லாம் அழைக்கப்படும்.

**ஸ்மரணம் :**

இறைவனது நாமங்களால் உணர்த்தப்படும் அவனது பெருமையையும், குணங்களையும் மனதால் அடிக்கடி நினைத்தல்.

மேலே குறிப்பிட்ட மூன்றும் இடைவிடாது செய்யும்போது ஆண்டவன் உளன் என்பதில் மன உறுதியும் அவனது உருவ நினைவும் உண்டாகும்.

**பாதஸேவனம் :**

இவ்வாறு ஆண்டவன் உள்ளான் என்ற உறுதி ஏற்பட்ட பின் அவ் இறைவனைத் தனக்குப் பிரியமான ஒரு வடிவமுடையவனாகச் சிந்திக்கிறான். அவனது திருவடித் தாமரைக்குக் குற்றேவல் செய்ய அவன் மனம் விரும்புகிறது. இதுவே பாத ஸேவனம் என்பது.

**அர்ச்சனம் :**

அவ்விறைவனது உருவை நீர், மலர் முதலியவற்றால் பூஜிக்கத் தோன்றும். இதுவே வழிபாடு அல்லது அர்ச்சனம்;

**வந்தனம் :**

வழிபாட்டிற்குப் பின் பணிந்து வணங்குதல். மேலே கூறிய காரியங்களினால் இறைவனிடம் நெருங்கிப் பழக ஆசையுண்டாகும்,

**தாஸ்யம் ;**

இறைவனை ஆண்டானாகவும் தன்னை அடிமையாகவும் பாவித்து ஸேவை செய்தல்,

**ஸக்யம் :**

மேலே குறிப்பிட்ட தாஸ்ய பாவனை முற்றும்போது அவனை நமக்குச் சமானமான ஒரு தோழனாகக் கருதுவது.

**ஆத்ம நிவேதனம் :**

நாம் செய்யும் செயல்கள் யாவும் இறைவனுக்கே உரியது என ஒப்புவித்தல்.

மேலே கூறியவை யாவும் பக்தியைப் பெறுதற்குரிய ஆரம்பப் படிகள். இவ் வழிகளைப் பின்பற்றினால் பகவான் மீது பக்தி பெருகும். பக்தி பெருகப் பெருக மன மாசு நீங்குகிறது. இவ் வாறு இறைவன் மீது அன்பு செலுத்துதல் வைத பக்தி அல்லது அபர பக்தி (ஆரம்ப பக்தி) எனப்படும்.

இம்முறையில் செய்யும் அன்பானது வளர்ந்து நாளடைவில் அவனைக் காண வேண்டும் என்னும் அவாவினை எழச் செய்கிறது. அவனைக் காணாத நாட்கள் பயனற்றன எனவும், காணாத வாழ்க்கை அவமானமானது எனவும் தோன்றும். இவ் அவ வாழ்க்கையைத் தவ வாழ்க்கையாக மாற்ற, இறைவனைக் காண மனம் துடிக்கும் உணவு நீர் மறந்து, இரவு பகல் பாராது மனம் ஏங்கும். பகவானை அடைய பரதவிக்கும். இதுவே ராக பக்தி அல்லது பரபக்தி என்பர். இம் மாதிரியான உயர்ந்த பக்தி உண்டாக வேண்டுமாயின் இறைவனது இயல்

திரு. பி. பாலசுப்பிரமணியன்,
சித்தூர்.

பைப் பற்றிய ஞானம் வந்தாக வேண்டும். அன்பு பூரணமாகக் பிரகாசிக்கும்போது உண்மையான ஞானம் தோன்றுகிறது. பக்தர்களைப் பற்றிக் கூறுமிடத்து கண்ணன் கீதையில் பின் வருமாறு கூறுகிறார்.

''சதுர்விதா பஜந்தேமாம் ஜனு:
ஸுக்ருதினோர்ஜுன
ஆர்த்தோ ஜிக்ஞாஸு ரர்தார்த்தி
ஞானி ச பரதர்ஷப''

''பரதக் குலத்தில் சிறந்தவனாகிய அர்ஜுனா! என்னைப் பக்தி செய்யும் உத்தமர்கள் நான்கு வகைப்படுவர். துன்பம் வந்தபோது அதனை நீக்குவதற்காகப் பகவானை அன்போடு வேண்டித் துன்பமொழியப் பெறுவோர் ஆர்த்தராவர். வீடு பேற்றில் இச்சையுற்று, அதனையும் பகவானே நிறைவேற்றுவார் என்றறிந்து அதன் பொருட்டு அவரைப் பிரார்த்திப்போர் ஜிக்ஞாஸுக்கள் எனப்படுவர். தமது வறுமை நீங்கிப் பெருஞ் செல்வம் பெறல் வேண்டும் என்னும் ஆசையோடு பகவானை வணங்குவோர் அர்த்தார்த்திகள் ஆவர். மெய்ஞ்ஞானம் பெற்று யாதொன்றையும் வேண்டாது உள்ளத்தில் இயல்பாகவே பொங்கும் அன்பினாலும் பிரேமையினாலும் இறைவனை வணங்குபவர்கள் ஞானிகள் எனப்படுவர். இந்நால்வகை அன்பர்களும் புண்ணியாத்மாக்களே எனினும் அவர்கட்குள்ளும் ஞானிகள் செய்யும் பக்தியே அனைத்தினும் மேலானது என்றும், ஞானிகட்குத் தம்மீதும், தமக்கு அவர்கள் மீதும் உள்ள பிரியத்திற்கு அளவில்லை'' என்றும் பகவான் கூறுகிறார்.

ஞானி பகவானைத்தவிர பிறிதொன்றையும் பெற விரும்புவதில்லை. அவனையே வேண்டி மிகச் சிறந்ததும், ஈடில்லாததுமான அப்பரம் பொருளையே பெறுகின்றனர். இதுவே பிரேம பக்தியின் எல்லை. இப்பிரேம பக்தியை—பரபக்தியை மேலும் ஐந்து விதமாகப் பிரிக்கலாம்.

சாந்த பக்தி ;

உயிர்களுக்கெல்லாம் உயிராய், தந்தையாய் உள்ள பகவான் மீது இருக்கும் அன்பினால், உலகப் பொருள்களின் மீதுள்ள பற்றினை யெல்லாம் அடக்கி மனதை அமைதி நிலையில்—சாந்த நிலையில் வைத்துக் கொண்டு பகவானையே தியானித்து அவனை அடைதல். முனிவர்கள் பெரும்பாலோர் இவ்வகைப் பக்தி கொண்டு வாழ்ந்தனர்.

தாஸ்ய பக்தி ;

பகவானைக் காண்பதோடு மட்டுமின்றி அவனோடு உறவு கொண்டாடி அவனுக்கு எப்போதும் தொண்டு செய்தல். இதற்கு உதாரணமாக விளங்கியவர்கள '' தங்கடன் அடியேனையும் தாங்குதல், என் கடன் பணி செய்து கிடப்பதே '' என்று கூறிய அப்பர் சுவாமிகளும், அநுமாரும் ஆவர்.

ஸக்ய பகதி ;

ஆண்டவனைத் தன்னுடையத் தோழனாகக் கருதிய சுந்தரரும், குசேலரும் இதற்கு உதாரணமாவார்கள்.

வாத்ஸல்ய பக்தி :

இறைவனைக் குழந்தையாகப் பாவித்து அவனைக் காப்பாற்ற வேண்டும் என்று ஸேவை செய்தல். கண்ணப்பர், பெரியாழ்வார் போன்றவர்கள் இவ்வகைப் பக்தி கொண்டு ஒழுகியவர்கள்.

மதுர பகதி :

பகவானை நாயகனாகப் பாவித்து பக்தி செய்தல். மீராபாய், கோபியர்கள், ஆண்டாள், நம்மாழ்வார் போன்றோர் இவ்வகைப் பக்தியில் சிறந்தவர்களாவார்கள்.

(24-ம் பக்கம் பார்க்க)

ஸ்ரீ ராஜகோபால சுவாமி கோயில்-ராஜமன்னார்குடி
திரு. வி. எஸ். ஸ்ரீநிவாசன்—தஞ்சாவூர்.



(19-ம் பக்கத் தொடர்ச்சி)

இங்கே திருப்பாவை முப்பது பாட்டும் படங்களாக சித்தரிக்கப்பட்டிருக்கின்றன. எல்லாவற்றையும் நின்று நிதானமாகப் பார்த்துவிட்டு பெருமாள் சந்நிதி முன்மண்டப நுழை வாயிலுக்கு வருகிறோம்.

கோயில் பிராகாரத்தைச் சுற்றிப் பார்த்தாகிவிட்டது. இனி உள்ளே நுழையலாம்.

சந்நிதி முன் மண்டபத்தில் இடப் பக்கம் ஆழ்வார் ஆச்சாரியர்கள் மூல உருவச் சிலைகளும், முன்னால் உற்சவ மூர்த்திகளும் வரிசையாக இருக்கின்றன.

வலப்பக்கம், இக்கோயிலில் எழுந்தருளியிருக்கும் பஞ்ச மூர்த்திகளில் மூன்றுவதான சக்கரவர்த்தித் திருமகன் ஸ்ரீராமன், தாயார் சீதையோடு, தம்பிகளோடும் சேவை சாதித்துக் கொண்டிருக்கிறார். தெற்கு நோக்கி நின்ற திருக்கோலம். சன்னிதி மேலேயுள்ள விமானத்திற்கு 'புஷ்பக' விமானம் என்று பெயர். இந்தக் கோயிலில் இவர் எழுந்தருளியதற்கு ஒரு வரலாறு உண்டு.

சசபதர் என்ற மகரிஷியின் குமாரனை மதுமான், கார்க்கேயர் மூலம் ஸ்ரீமத் ராமாயணம் கேட்டு, ஸ்ரீராமனிடத்தில் மிகவும் ஈடுபாடு கொண்டு, ஸ்ரீராமனை தம்பிகளோடும் மைதிலியோடும் ஸேவிக்கும் பாக்யம் கிட்டுமா என்று சிந்தித்துக் கொண்டிருக்கையில், ஒரு நாள், எம்பெருமான் கனவில் தோன்றி, பிருநதாவனமாகிற இத் தலத்திற்குச் சென்றால் தரிசனம் கிடைக்கும் என்று சொல்ல, மதுமான் இங்கு வந்து கைரவிணியில் தீர்த்தாமாடித் துதித்துக் கொண்டிருநதார். உடனே சக்கரவர்த்தித் திருமகனும் ஸர்வாலங்கார பூஷிதராய் தம்பி பரதன் சத்ருக்னன் லக்ஷ்மணனோடும், தாயார் மைதிலியோடும் அனுமனோடும் சேர்ந்து திவ்ய சேவை சாதித்தார்! மதுமானின் வேண்டுகோளுக்கு இணங்கி இங்கேயே தங்கி, பக்தர்களுக்கு இன்றைக்கும் நாளைக்கும் தரிசனமளித்துக் கொண்டு சர்வா பீஷ்டங்களையும் அருளிக் கொண்டிருக்கிறார்.

இங்கே ஒரு விசேஷம் கவனிக்க வேண்டும். சாதாரணமாக எல்லா இராமர் சன்னிதிகளிலும் அனுமான் சீதை, லஷ்மணன் இவர்களோடு தானிருப்பார் கோதண்டபாணி. ஆனால் இங்கு மட்டும், இவர்களையும் சேர்த்து மற்ற இரண்டு தம்பிமார்கள் பரத சத்ருக்னனோடும் காட்சி தருவது

## கருணை மழை பொழிவாய் நீயே!

திரு. கே. எஸ். சங்கர நாராயணன், கலபாக்கம்.

குரு வம்சத்தோர் கொட்டத்தை ஒடுக்கினாய் நீயே,
குருவாக உன்னையே நினைந்துருகுகின்றேன் நானே,
உருவமெல்லாம் உனதுருவாய்த் தோன்றுகிறாய் நீயே,
பருவ விளையாட்டில் மறந்தேன் உன்னையே நானே!

எண்ணியதெல்லாம் நடத்தி வைப்பாய் நீயே,
கண்ணிய வாழ்வு வாழ்ந்தறியேன் நானே,
பண்ணிய பாவமெல்லாம் போக்குவாய் நீயே,
மண்ணிலே மதிமயங்கி நிற்கின்றேன் நானே!

இந்திரன் கர்வத்தை அடக்கினாய் நீயே,
மந்திர தந்திரமேதுமறியேன் நானே,
சந்திர சூரியரைச் சேர்த்து வைத்தாய் நீயே,
சுநதர ரூபனே! உன்னையே வணங்கினேன் நானே!

எல்லாமறிந்தும் ஏன் வரவில்லை நீயே?
பொல்லா உலகிலே பாவியாய் வாழ்கின்றேன் நானே,
அல்லாதனவும் ஆவனவும் அறிவாய் நீயே,
கல்லாதவன் என்செய்வேன் இங்கு நானே!

இமைப்பொழுதில் துயரம் தீர்ப்பாய் நீயே,
அமைதியின்றித் தவிக்கின்றேன் என்றும் நானே,
ஏமையின் மணாளனே! ரட்சிப்பாய் நீயே!
சுமைசுமையாய்ப் பாவம் சுமந்தேன் நானே!

வரமாய், வரமளிப்பாய், வடிவழகன் நீயே!
தருவாய் தருமமெல்லாம் எனக்கு நீயே!
குருவினுக்கெல்லாம் குருவாய் விளங்குகிறாய் நீயே!
குருவாயூரப்பனே! கருணை மழை பொழிவாய் நீயே!

பார்த்திபன் மைத்துனா போற்றி!
கார்த்திகேயன் மாமனே போற்றி!
நேர்த்தியாய் வாழ்ந்தோய் போற்றி!
கீர்த்தி என்றும் பெற்றாய் போற்றி!

கீதையின் தலைவனே போற்றி!
சீதையின் நாயகனே போற்றி!
ராதையின் கணவனே போற்றி!
பாதையில் துணைவனே போற்றி!

அபூர்வம். ''ஸ்ரீசீதா லக்ஷ்மண பரத சத்ருக்ன, அனுமத் சமேத ஸ்ரீ ராம சந்திரமூர்த்தி'' என்ற தொடர் இச் சன்னிதிக்குத்தான் மிகவும் பொருந்தும்.

ஸ்ரீராமரை சேவித்து விட்டு அங்கிருந்தே அப்படியே இடதுபக்கம் திரும்பினல் பஞ்சமூர்த்திகளில் நான்காவரான ரங்கநாதனைக் காணலாம். இவருடைய பத்தினிதான் பிராகாரத்திலிருக்கும் வேதவல்லித்தாயார். கிழக்கு நோக்கி பள்ளி கொண்டிருக்கிருர். மேலே பிரணவ விமானம். இவர் இங்கே எப்படி வந்தார் தெரியுமா?

முன்னொரு காலத்தில் ஒரு சமயம் ஸ்ரீவைகுண்டத்தில் நாராயணனுக்கும் மஹாலக்ஷ்மிக்கும் பிரணய கலகம் ஏற்பட்டது. இதன் காரணமாக மஹாலக்ஷ்மி பூலோகத்தில பிருந்தாவனம் என்னும் இந்த க்ஷேத்திரத்தில் ஒரு சந்தன மரத்தடியில் பெண் குழந்தையாகத் தோன்றினள். அவளை எடுத்து, 'வேதவல்லி' என்று பெயரிட்டு வளர்க்கிருர் பிருகு மஹரிஷி; பின் ஒரு நாள் க்ஷீராப்தி நாதனே இங்கெழுந்தருளி வேதவல்லியை மணம் புரிந்து கொள்கிருர். அச்சமயம் வேதவல்லி 'இவர்தான் மந் நாதன்' (என் நாதன்) என்ருள். இதனுல் இவ்வெம் பெருமான் 'மந் நாதன்' என்றே பெயர் பெற்றுவிட்டார்; வேதவல்லியை மணந்துகொண்ட மகிழ்ச்சியினுல் நிம்மதியாகக் காலை நீட்டி படுத்து விடுகிருர். அவர்தான் நாம் இப்போது பார்த்துக்கொண்டிருக்கும் ரங்கநாதனுன மந்நாதன்.

இவரையும் சேவித்துக் கொண்டு பார்த்தசாரதி கருவறைக்கு முன்னுல் வந்து நிற்கிரேம். உள்ளத்தில் ஒரு சந்தேகம். 'இந்த கோயிலில் பஞ்ச மூர்த்திகள் இருக்கிருர்களே; அவர்களில் வரதராஜன், நரசிம்மன், ஸ்ரீ ராமன், ரங்கநாதன் இவர்களை சேவித்து விட்டோம். இனி பார்த்த சாரதி ஒருவர் தான் பாக்கி. இதோ அவர் சந்நிதியில்தான் நிற்கிரேம். ஆனல் பஞ்சமூர்த்திகளில் இன்னும் ஒருவர் இருக்கிறரே? திருப்பதி வேங்கடநாதன். அவர் எங்கே இந்தக் கோயிலில்? என்று கேட்கத் தோன்றுகிறதல்லவா?

இதோ, நின்று கொண்டிருப்பதே அவர் சந்நிதியில்தான். என்ன! திருப்பதி வேங்கடாசலபதி சந்நிதியிலா' இவர் பார்த்தசாரதியல்லவா'

இல்லை' மூலஸ்தானத்தில் கம்பீரமாக, முறுக்கிவிட்ட மீசையோடு ஆஜானுபாஹுவாக நின்று கொண்டிருக்கிருரே அவர்தான் திருமலை வேங்கடநாதன்! ஆம்! வேங்கடநாதன் தான் இந்த க்ஷேத்திரத்தில் ''பார்த்த சாரதி கோல''த்தில் வந்திருக்கிருர். அதனுல்தான் மூலவருக்கு ''வேங்கட கிருஷ்ணன்'' என்றே பெயர். பார்த்த சாரதி என்ற பெயர் முன்னுலிருக்கும் உற்சவமூர்த்திக்குத்தான்!

திருப்பதி ஸ்ரீநிவாசன் இங்கே எப்படி வந்தாரென்ருல் அதற்கும் ஒரு வரலாறு கூறுகிறது ஸ்தலபுராணம்.

திருமலைமேல் நிற்கும் மாதவனைக் காண ஒருசமயம் சுமதி என்ற தொண்டைமான் சக்கரவர்த்தி சென்ருர். அவருக்கு ஓர் ஆசையுண்டாயிற்று. ''இந்த ஸ்ரீ நிவாஸன் அர்சுனனுக்கு ஸாரத்யம் செய்த திருக்கோலத்தில் ஸேவை சாதிப்பரோ'' என்று. உடனே பெருமாள் இவர் முன்தோன்றி, 'மயிலை பிருந்தாவனத்திற்குச் சென்ருல்சேவை சாதிக்கிறேன்'' என்றருளினர். இந்த வாக்கிற்கேற்ப இந்த இடத்தில் திருவேங்கடமுடையானே 'பார்த்தசாரதி' கோலத்தில் எழுந்தருளினர். இந்தத் தொடர்பினுலேதான் மூலவருக்கு ''வேங்கடகிருஷ்ணர்'' என்ற திருநாமம்.

திருப்பதி ஸ்ரீநிவாஸன் தான் இவர் என்பதற்கு இன்னெரு பிரமாணமும் காணத்தக்கது. அதாவது, திருமலையில் மூலவருக்கு மேல்உள்ள விமானத்திற்கு ''ஆனந்த நிலைய விமானம்'' என்று பெயர். இங்கே திருவல்லிக்கேணியில் மூலவருக்கு மேலுள்ள விமானத்திற்கு என்ன பெயர் தெரியுமா? ''ஆனந்த விமானம்'' என்ன பொருத்தம் பாருங்கள்.

இனி, பெருமாளை பார்ப்போம். 'வேஙகடகிருஷ்ண' ஞகிய 'பார்த்த சாரதி' தனியே வரவில்லை. அண்ணன் பலராமன், தம்பி சாத்யகி, மனைவி ருக்மிணி, மகன் பிரத்யும்னன், பேரன் அனிருத்தன்—இப்படி குடும்ப சமேதராய் காட்சி தருகிருர்! பார்த்தனுக்குத் தேரோட்டிய சமயத்தில் ஆயுதமே எடுப்பதில்லை என்று சத்தியம் செய்தவரல்லவா. அதனுல் மூலவர் கையில் சக்கராயுதம் இல்லை. வலது கையில் சங்கம் இருக்கிறது. 'சங்க மிடத்தானே அச்சோ அசசோ'' என்ற ஆழ்வார் வாக்குப்படி சாதாரணமாக இடது கையிலிருக்க வேண்டிய சங்கம் இங்கே வலது கையில் இருப்பது குறிப்பிடத்தக்கது.

மூலவருக்கு முன்னுல் உற்சவர் பார்த்தசாரதி, ஸ்ரீ பூதேவிமார்கள் சமேதராய் நம் உள்ளத்தைக்கொள்ளை கொள்கிருர். முகத்திலெல்லாம் போரில் ஏற்பட்டவடுக்கள். சர்வாலங்கார பூஷிதராய் பட்டாடைகள் அணிந்து, வைர அணிகலன்களோடு ஜ்வலித்துக் கொண்டிருக்கும் அழகே அழகு. பார்க்கக் கண்ணுயிரம் வேண்டும். ஆனுல் திருமங்கையாழ்வார் 'கண்டேன்' என்கிருர். ''வேதத்தின் சுவைப்பயனை விழுமிய முனிவர் விழுங்கும் கோதிலின் கனியை நந்தனுர் களிற்றை குவலயத்தோர் தொழுதேத்தும் ஆதியை அமுதை என்னையாளுடைய அப்பனை ஒப்பவரில்லா மாதர்கள் வாழும் மாடமாமயிலைத் திருவல்லிக்கேணி கண்டேனே'' என்கிருர்;

இத்தகைய அல்லிக்கேணி அழகனை நாமும் கண்குளிரத்தரிசித்தோம். ஆலயத்தை வலம் வந்து, பஞ்சமூர்த்திகளையும் கண்டு களித்தோம். தீர்த்தப் பிரஸாதிகள் பெற்றுக்கொண்டு விடை பெறுகிரேம்.



(21-ம் பக்கத் தொடர்ச்சி)

இதுவரை நாம் பக்தியின் இயல்பும், அதன் வகைகளையும் பார்த்தோம். இனி அப்பக்தி வளர்வதற்குரிய வழி முறைகளை பார்ப்போம்.

1. ''அறநறிந்துமூத்த அறி
வுடையார் கேண்மை
திறநறிந்து தேர்ந்து கொளல்''
என்றார் வள்ளுவர்.

''முதலில் நமக்குத் தேவை ஸாதுக்கள் ஸங்கம். இதனையே இராமலிங்க வள்ளலார் ''ஒருமையுடன நினது திருமலரடி நினைக்கின்ற உத்தமர்தம் உறவு வேண்டும்'' என்றார்.

அதாவது அறம் உணர்ந்தவர்களாய், தன்னைவிட மூத்தவர்களாய் உள்ள பெரியோர்களின் நட்பைக் கொள்ளும் வகையால் அறிந்து ஆராய்நது கொள்ள வேண்டும்.

2. உள்ளொன்று வைத்து புறமொன்று பேசுவார் உறவு கலவாமை வேண்டும்; அதாவது தீயோர் நட்பை ஏற்கக் கூடாது. இருந்தாலும் விட்டு விடல் வேண்டும்.

3. பெறுமை பெறு நினது புகழ் பேச வேண்டும்; ஆண்டவனது ''பொருள்சேர்'' புகழைப் பேசுதலும் அதைக் கூறும் நூல்களைப் படித்தலு மாகும்.

4. பொய்மை பேசாதிருக்க வேண்டும். வாய்மையைப் பின்பற்ற வேண்டும். நினைவு, சொல், செயல் முதலியன ஒன்றுக்கொன்று பொருத்த முடையதாயத் தூய்மையாய் இருத்தல் அவசியம்.

5. பெருநெறி பிடித்தொழுக வேணடும்: ஞான மார்க்கங்களைப் பின் பற்றுதல் வேண்டும்.

6. மதமான பேய் பிடியாதிருக்க வேண்டும்: யான், எனது என்னும் ஆணவ மலத்தை அறவே ஒழிக்க வேண்டும். எல்லாம் இறைவன் செயல் என்றிருத்தலுமாகும்.

7. மருவு பெணணாசையை மறக்க வேண்டும்: இல்லறத்தாறுயினும், துறவறத்தாறுயினும் வழுவாது கடைப்பிடிக்க வேண்டுவது பிரம்மச் சரியம்.

8. உனை மறவாதிருக்க வேண்டும்: பெண்ணாசையை மறக்க வேண்டி இறைவனை இறைஞ்சிய வள்ளல் பெருமான், மறவாதிருக்க வேண்டிய பொருளுண்டு எனவும், அதுவே இறைவன் எனவும் விளக்குகிறார்.

9. மதி வேண்டும்; நின் கருணை நிதி வேண்டும்; நோயற்ற வாழ்வை நான் வாழ வேண்டும்: இது சாசுவதமானது. இது அழியும் தன்மையது என்னும் வேறுபாட்டை எப்போதும் விசாரித் தறியும் சிறந்த புத்தி வேண்டும். இதனை ஆணடவனின் கருணையினுல் தான் சாதிக்க முடியும். அடுத்து நோயற்ற வாழ்வு: இஃது சாத்வீக ஆகாரம், உண்ணு நோன்பு முதலிய வாற்றுன் பெற முடியும்.

இதுகாறும கூறியவாற்றான் பக்தியின் இயல்பும், அதன் வகைகளும், அவற்றினை பெறும் வழிகளையும் பார்த்தோம். எல்லாம் வல்ல இறைவனின் அருளால் பக்தி நெறியில் சிறக்க இறைஞ்சுவோமாக!



# ஓர் அறிவிப்பு

கி. பி. 15-ஆம் நூற்றுண்டைச் சார்ந்தத் தெலுங்கு இசைக் கவிஞரும், அவ்வேழு மலைகளில் நின்றவண்ணம் கோலம் கொண்டிருக்கும் வேங்கடவனின் சிறந்த பக்தருமான ஸ்ரீ தாள்ள பாக்க அன்னமாச்சார்யார் அவ்நெடியோன் மீது பக்திச் சுவையும் காதற்சுவையும் மிக்குஒளிர 32,000 கீர்த்தனைகளை இயற்றியுள்ளார். அன்னாரின் அச்சீர்மைமிகு கீர்த்தனைகளின் புகழ் எங்கும் பரவும் வகையில் அக்கவிஞரின் நினைவாக, திருப்பதியில் ரூ 4.5 இலட்சம் செலவில் 'ஸ்ரீ அன்னமாச்சார்யா கலாமந்திரம்' ஒன்று கட்டப்பட்டுள்ளது. தற்போது அக்கலா மந்திரத்தில், சமயப்பற்றும் ஆன்மீகப்பற்றும் எங்கும் தழைத்தோங்கும் வகையில் நூலகம் ஒன்று திறக்கப்பட்டுள்ளது. இந்நூலகத்திற்கு இந்து சமயம், புராணம் மற்றும் இந்தியக் கலாசாரம் சம்பந்தப்பட்ட பத்திரிகைகள், நூல்கள் பக்தர்களிடமிருந்து இலவசமாக வரவேற்கப்படுகின்றன. மக்கள் சேவையே மகேசன் சேவையாகக் கொண்டு, இப்புனித சேவையில் பங்கேற்று அவ்வெல்லாம் வல்ல அலர்மேல் மங்கை உறைமார்பனின் அருளைப்பெறுவீர்களாகுக!

செயலாட்சித் தலைவர்,
தி. தி. தேவஸ்தானம், திருப்பதி.

இப்படித் தன் குறைகளை நினைந்து இத் தயா சதகத்தைப் பாட யோக்யதையற்ற தன் நிலையெல்லாம் நினைந்து, பின் ஏன் பாடினார் எப்படிப் பாடினார் என்பதை 100-101 ஸ்லோகங்களில் மிக அழகாக விளக்குகிறார்.

தயா தேவியின் முன் நின்று அவர் பேசும் பேச்சுக்களைக் கேட்பவர்களும் தங்கள் அநாத்ம குணங்களைத் தெளிவாகக் கண்டு தங்கள் ஆத்ம குணங்களை வளர்த்துக் கொள்ளலாம்.

இதோ இந்த 99வது ஸ்லோகத்தினைப் பாருங்கள்.

"வ்ருஷசைலநாதனுடைய தயா தேவியே, நான் யார் தெரியுமா? நான் மதம் பிடித்த ஒரு பெரிய யானை. எனக்கென உள்ள சுவையான உணவுகளைக் கண்டாலும் மதம் பிடித்து அதனை உண்ண மாட்டாமல் கலங்கி

பொருள்படும்படி "அநுக்ரஹம்" என்ற சொல்லை இவர் பேசினாரோ எனபர் பெரியோர்.

,,த்ருஷ்டேபி துர்பலதியம தமநேபி த்ருப்தம்
ஸ்நாதவாபி தூளிரசிகம பஜநேபி பீமம்
பதவா க்ருஹாண வ்ருஷசைல பதேர்தயே மாம
தவத் வாரணம் ஸ்வயமநுகரஹ ச்ருங்கலாபிஃ"

வைணவ ஸம்பிரதாயத்தின் துணிபு ஈண்டு ஓர் நல்லாசிரியனை அண்டி ப்ரபத்தி மார்க்கத்தைச் செய்தானானால் மோக்ஷம் நிச்சயம் என்பதே. இந்த ராமானுஜ ஸித்தாந்தத்தைப் பல ரஹஸ்ய க்ரந்தங்களாலும் ரஹஸ்ய த்ரய ஸாரம் என்ற ஓர் உயர்ந்த நூலாலும் நிர்த்தாரணம் செய்துள்ளார் ஸ்ரீ நிகமாந்த மஹாதேசிகன்.

மோக்ஷம் பெற்று எந்த எம்பிரானுக்கு கைங்கர்யம் செய்து ஆநந்



சொல்கிறேன். மோக்ஷத்தில் முக்தர்கள் பெரும் ஆனந்தானுபவத்தை உன் நாயகனான ஸ்ரீனிவாஸன் எனக்கு இந்த உலகத்திலேயே அளித்துவிட வேண்டும். அதற்கு வேண்டிய அநுக்ரஹத்தை நீ செய்ய வேண்டும்

# திருவேங்கடவனின் திருவருள் தேவி

நிற்பேன். மாவுத்தன் கடுமையாக அடித்தாலும் உன்மத்தத்தால் அதனைப் பொருட்படுத்தாது நிற்பேன். என்னைச் சுத்தமாக தெளிந்த நீரில் குளிப்பாட்டின மறுகணமே புழுதியை வாரி என் தலையில் போட்டுக் கொள்வேன். என்னிடம் அன்புடன் நல்ல பண்டங்களைக் கொடுக்க முற்படும் நல்லவர்களும் பயப்படும்படி நடந்து கொள்வேன்.

ஆனால் தயா தேவியே! இது உன்னுடைய யானை;

நீயாகவே உன்னுடைய அநுக்ரஹம் என்னும் சங்கிலிகளால் பிடித்துக் கட்ட வேண்டுமம்மா,

ஜாக்கிரதை, நீ முன்னாடி வந்தால் உன்னையும் கூட முட்டித் தள்ள முயலும் இந்த யானை. ஆகையால் பின்னால் வந்து கட்டம்மா" என்று

திக்கப் போகிறாரோ அந்த எம்பிரானே அல்லவா மிக விரும்பி திருமலையைத் தேடி வந்துள்ளான்.

திரு. எஸ். வி. ராமசுவாமி,
செகந்திராபாத்

வந்ததுமட்டுமா? தான் இவ்வுலகை விரும்பி வந்ததுபோல் தன்னிடம்வரும் பக்தர்களுக்கும் இவ்வுலக இன்பம் துய்க்குமாறு, வேண்டிய ஐஹிக பலன்களை யெல்லாம் வாரி வழங்குகின்றான்!

இப்படி எல்லாம் நினைத்த ஆசாரியன் தயா தேவியிடம் ஒன்று வேண்டுகின்றான். இதைத் தவிர வேறு ஒன்றும் எனக்குத் தேவையில்லை (அதஃ பரம் த்வயிநாதநீயம் மே கிமபி நஃ)

அது என்ன?

(மே முக்தாநுபூதிம் இஹ யதா தாஸ்யதி ததா மயி ப்ரஸாதம்) என்கிறார்.

இதோ இந்த 100வது ஸ்லோகம்.

"நாதஃ பரம் கிமபி மே த்வயி நாத நீயம்
மாதர்தயே மயி குருஷ்வ ததா ப்ரஸாதம்
பத்தாதரோ வ்ருஷகிரி ப்ரணயீ யதாஸௌ
முக்தாநுபூதிமிஹ தாஸ்யதி மே முகுந்தஃ

இனி எட்டு ஸ்லோகங்களில் தனக்கும் தயாதேவிக்கும் உள்ள தொடர்பினையும், அவளகுணச்சிறப்பின் சொல்லொணா மேன்மையையும், அவைகளைச் செவ்வனே கூற தன்னால் மட்டுமல்ல பல பெரியோர்களாலும் இயலாது தோல்வியடைந்த நிலைகளையும்

மிக ரஸமாகப் பேசி இப்ப்ரபந்தத்தை முடிக்கின்றார் கவி ஸார்வபௌமன். அவைகளில் சிலவற்றைமட்டும் பேசி முடிப்போம்.

''எம்பெருமானுடைய எல்லையற்ற பல குணங்களில ஒன்றுதான் ''தயை'' என்பது. மற்ற குணங்களில் முக்ய மானவை ஞானம், பலம், ஐச்வர்வம், வீர்யம், சக்தி, தேஜஸ். இவைகளால் தான் அவன் ஷாட்குண்ய பரிபூரணன் எனப்படுகின்றான். இப்படி உயர்ந்த பல குணங்களை யெல்லாம் விட்டுவிட்டு ஏதோ அவ்வப்போது ஸ்ரீனிவாஸன் திருவுள்ளத்தில் தோன்றி மறையும் இந்த சிறு குணத்தை இப்படிப் புகழ் கின்றானே இவன் என்று மற்றைய குணங்கள் பொறாமை கொண்டு என்னை வெறுக்கலாம்',

என்று கவிஞன் உள்ளம் நினைத்த மறுகணமே மற்றைய குணங்களின் புகழ் பேச்சும் வெற்றி ஒலியும இக் கவிஞன் காதுகளில் ஒலித்தனவோ என்னவோ ''இல்லை இல்லை அந்த குணங்களெல்லாம் என்னைப் போற்று கின்றன! வாழ்த்துகின்றன'' என்பான்.

''ஏன்''.

''தயை'' என்ற குணம் அவனிடம் தோன்றினால் அன்றோ எங்களை அவன் பயன்படுத்துகின்றான்'' என்றன பிற குணங்கள்.

இந்த ஒரு குணம் அவனிடம் இல்லாவிடில் அவன் ஞானத்தாலோ, பலத்தாலோ, ஐஸ்வர்யத்தாலோ நமக்கு என்ன பயன!

இக்கருத்தை வேறு போக்கில் ''வ்ருஷகிரி க்ரஹமேதி குணா, போத, பல ஐச்வர்ய வீர் சக்தி தேஜஃ-தோஷா பவேயு ரேதேஃ யதி நாமதவயா வீனா பூதாஃ'' என்று இக்கவி முன்பே பாடி யுள்ளான் எனினும் ஒரு ரஸமான வைப்பில் ஈண்டு பேசுகின்றான்.

நிஸ்ஸீம வைபவ ஜுஷாம் மிஷதாம் குணானாம்
ஸ்தோதுர்தயே வ்ருஷகிரீச குணேச்வரீம் த்வாம்
தைரேவ நுநமவசைரபிநந்திதம் மே
ஸத்யாபிதம் தவ பலாதகுதோ பயத்வம்''

கடவுள் உள்ளத்துள்ள கருணையைப் போற்றிப் புகழாத மதங்களோ மறை களோ இல்லையென்றே சொல்லலாம். ஸாவேச்வரனை திருவேங்கடமுடை யான் கருணையைப் புகழ்ந்து பேசத் தொடங்கிய மறைகளும் கூட இன் னும் ஆரம்பத்திலேயே இருக்கின்றன. ஆனால் நானோ அதனை முழுதும் கூறி முடித்து விட்டவன்போல் ஒரு நூறு ஸ்லோகங்களில் பேசி முடித்து விட்டேன். இப்படியோர் ஸாஹ ஸத்தை தயா தேவியேதான் பொறுத் தருள வேண்டும்.

அவளிடம் அபசாரப்படுவதை எம் பிரானே கூட மன்னிக்கமாட்டான் என்றால் நான் யாரைக் கொண்டு என் அபராதத்தைப் போக்கிக் கொள்ள முடியும். '' அவளேதான் கதி '' என்று இக்கவி மிக உருக்கமாகச் சரணடைகின்றான் 102வது ஸ்லோகத தில்.

''பகவானுடைய தயை என்ற விஷ யத்தைப் பேச முற்பட்ட வால்மீகி, வ்யாஸர் போன்ற மஹான்களும் இந்த தயா ஸாகரத்தில் மூழ்கிவிடாமல அதன் கரையில் நின்றே பேசுவது ஏன் என்று எனக்கு இப்பொழுதுதான் புரிகின்றது. கடலில் மூழகி கரை காணாது சிக்கித் தத்தளிப்பவன்போல்

## அறிவிப்பு

திருமலையில காட்டேஜுகளுக்காக முன்பணம் செலுத்தி, தனி ஒதுக்கீடு (Reservation) செய்து கொள்ளும் யாத்திரிகர்களின் நன்மைக் காக, மேலாண்மை கீழ்வரும் சலுகைகளை அளித்துள்ளது.

1. காட்டேஜுகளுக்காக தனி ஒதுக்கீடு செய்து கொண்ட தேதி களுக்குள் சம்பந்தப்பட்ட யாத்திரிகர்கள் நாட்கழித்து வந்தா லும், மீதம் இருக்கும் நாட்களுக்கு, அவர்கள் கணக்கில், வராத நாட்களுக்குரிய கட்டணத்தைப் பிடித்துக் கொண்டு, மீதித் தொகைக்கு அவர்களுக்கு இட வசதி அளிக்கப்படும்.

2. காட்டேஜுகளுக்காக முன் பணம் அனுப்பியவர்கள், தாஙகள் கோரியபடி தங்கள் பெயரில் ஒதுக்கீடு செய்யப்பட்ட நாட்களை, சூழ்நிலைக் காரணமாக மாற்றிக் கொள்ள நினைத்தால், அவர்கள் இரணடு நாட்களுக்கு முன்பேயே, (அதாவது ஒதுக்கீடு செய்யப் பட்ட தேதிக்கு முன் இரண்டு நாட்கள்) இது சம்பநதமாக விண்ணப்பித்துக் கொள்ள வேணடும்.

3. காட்டேஜுகளுககாக முன பணம் செலுத்தியவர்கள் தங்களுக்கு வழங்கப்பட்ட தனி ஒதுக்கீடு தேதிகளில் வர இயலாது, செலுத் திய தொகையைத் திருப்பிப் பெற வேண்டுபவர்கள், தங்கள் எண ணத்தை, ஒதுக்கீடு செய்யப்பட்ட தேதிக்கு இரணடு நாட்களுக்கு முன்பேயே விண்ணப்பம் ஒன்றன் மூலமாக தெரிவித்தல் வேண்டும்.

செயலாட்சித் தலைவர்,
தி. தி. தேவஸ்தானம், திருப்பதி.

உன் குணக் கடலில் மூழ்கி ஏதோ நூறு ஸ்லோகங்கள் பேசிவிட்டு அதன் எல்லையை நினைக்கவும் முடியாமல் தத்தளிக்கின்றேன். என்னுடைய இந்த அவல நிலையைக் கண்டு ஸ்ரீனிவாஸனும் அலர்மேல்மங்கைத் தாயாரும் சிரிக்கின்றனர். தயா தேவியே உன் அருளால்தான் என்னுடைய இந் அவல நிலை நீங்கும்''

என்று இவ்வாறெல்லாம பேசும் இம்மஹா கவி 104வது ஸ்லோகத்தில் தன்னையும், இந்நூலின் தோற்றுவாயையும் மிக ரஸமாகப் பேசுவது நோக்கற்பாலது.

''திருவேங்கடவன் விளையாட்டே அலாதிச் சுவையூட்டவல்லது. என் போன்ற சிறுவனை ''வேதாந்த தேசிகன்'' என்ற பதத்தில் ஏற்றுவித்தான அதமட்டுமல்ல.

என்னை ஓர் வீணையாக்கிப் பாடவும் ஒரு வாய்ப்பை உருவாக்குகின்றான். இது ஒரு விளையாட்டு முறை: (''வைஹாரிகேண விதிநா''). அது என்ன விளையாட்டு ?

அன்று அவன் தனிமையில் அவன் உள்ளத்துறையும் தயா தேவி வெளித் தோன்றுகிறாள். மக்கள் வேங்கட நாதனையும் பாராட்டி பத்மாவதியையும் புகழ்ந்து பாடுவது அவள் செவிகளில் விழுகின்றது. ''பாருங்கள். எங்குக் கண்டாலும் உங்கள் புகழும் உங்கள் தேவியின் புகழும்தான்''

'ஆம்! நானே உன்னைப் பாடலாம் என்று யோசிக்கிறேன்''

'' போதும்: சிரிப்பார்கள் ''.

''ஏன் நீ போற்றடப்பட வேணடிய வளில்லையா ?''

''இருக்கலாம். ஆனால் உங்கள் ஸஹஜ குணமாகவே உம் உள்ளத்து வாழும் என்னைப் பாடுவது ஓர் தற் புகழ்ச்சி என்று உமக்குத் தோன்றவில்லை?''.

'' அப்படியானால் (சுற்று முற்றும் பார்த்த வேங்கடவன் கணகளில் ஒரு வீணை தென்படுகிறது.) இந்த வீணையைப் பாடச் சொல்கிறேன'' என்று தன் தாமரைக் கைகளால் மீட்டுகின்றான் அநத வீணையை அது தேசிக வீணை. ஒலித்தது.

ஆங்கு எழுந்த நாதமே இத்தயா சதகம். இக்கவி தன்னை எமபெருமான் கைகளால் திணடபபடும ஓர் அசேதனப் பொருளாய்ப் பேசும் இநத ஸ்லோகம் பின் வருமாறு

''வேதாந்த தேசிக பதே விநிவேசய
பாலம
தேவோ தயா சதக மேத தவா
தயந் மாம்
வைஹாரிகேண விதி நா ஸமயே
க்ருஹிதம்
வீணு விசேஷமிவ வேங்கட சைல
நாதஃ

பின் இரு ஸ்லோகங்களால் தான் உருவகப்படுத்திப் பேசப்படும் இத் தயா தேவியின் நிலை, செயல், கருணை யாவும் முழு உண்மை யென்றும் இதனைப் பாடுவார்கள். கேட்பவர்களுக்கும் எல்லையற்ற நன்மைகளை திருவேங்கடவன் உவந்து அருள்வது திண்ணம். ஸத்வ குண மறைப்பெரியோர்களுங் கூட இதனிடத்து சொற்குற்றம் பொருட் குற்றம் காண முயற்சியாது திருவேங்கடவன் அருள் இலக்கணங்களைப் பேசும் இதனை ஆதரித்து ஓதுவர் என்றெல்லாம் பேசி கடைசியில் மங்கள ஸ்லோகங்கள் இரண்டு பேசி முடிக்கின்றான்.

''விச்வாநுக்ரஹமாதரம வ்யதிஷஜத்
-ஸவர்காபவர்காம் ஸுதா-
ஸத்ரீ சிமிதி வேங்கடேச்வர கவிர்
பக்த்யா தயாமஸ்துத
பத்யாநாமிஹ யத்விதேய பகவத்
ஸங்கல்ப த்ருமாத்
ஐஞ்ஜ்ஜா மாருத தூத சூத நயதஃ
ஸாமபாதி கோயம் க்ரமஃ''

உலகத் தாயாகிய திருவருள்தேவி, ஸ்ரீனிவாஸன் என்ற கற்பக மரத்தை உலுக்கி ஆங்கே தன் குழந்தைகளாகிய மக்கள் களித்து ரஸித்து எல்லா க்ஷேமங்களையும் அடைய இத்தயா சதகமாகிய மாம்பழங்களை உதிர்த்தாள். உணடு களியுங்கள்.

கஷ்டமடைந்து தன்னை வந்தடையும் மக்களுக்கு அருள் பாலிப்பதே ஸங்கல்பமாக உடையவன் ஸ்ரீனிவாஸன். பெரிய பிராட்டியான ஜகந் மாதாவுடன திருமலையில் நின்ற இவ் வள்ளலின் அருள் மழையே காட்டாறுகளாகக் கரை புரணடோடுகின்றது திருமலையில்.

யாரேனும் இந்நூலில் சிறு குற்றங் குறைகள் பேசினாலும் ''ஜர்......ஜர்'' என்று புரண்டு வெள்ளமிட்டு ஓடும் அவன் கருணை வெள்ள ஒலிகளில் மறைந்துவிடும்.

ஸத்வம் மிகுந்த தெள்ளிய குற்றமற்ற உள்ளங்களையே இத்தயா தேவி உருவாக்குகின்றாள்.

''திவ்ய தம்பதிகளின் கருணையாகிய தயா தேவியே தாயாய் நின்று மக்களைக் காக்கின்றாள்'' என்று இந் நூலின் துணிபைக் கூறி முடித்து மகிழ்கின்றார் தேசிக வீணையாகின்ற இவ்வேதாந்த மஹாதேசிகன்.

''காமம் ஸந்து மிதஃ கரம்பித குண
வத்யாநி பத்யாநி நஃ
கஸ்யாஸ்மிந் சதகே ஸதம்புகதகே
தோஷச்ருதிம் க்ஷாம்யதி
நிஷ்ப்ரத்யூஹவ்ருஷாத்ரி நிர்ஜ்ஜர
ஜரத்காரச்சலேநோச்சலந்
தீநாலம்பந திவ்ய தம்பதி தயா
கல்லோல கோலாஹலஃ''

★

கவிதார்க்கிக ஸிம்ஹாய கல்யாண
குணசாலிநே
ஸ்ரீமதே வேங்கடேசாய வேதாந்த
குரவே நமஃ

— முற்றும் —

# தங்கு வசதி விவரங்கள்

திருமலையிலுள்ள கீழ்வரும் காட்டேஜுகளுக்கான வாடகை விவரங்கள் 1–12–78 முதல் கீழ்ககண்டவாறு மாற்றஞ் செயயப்பட்டுள்ளன.

| எண் | காட்டேஜ் அல்லது அறைத் தொகுதியின் பெயர் | இதுவரை வசூலிக்கப் பட்ட தொகை (நாள் ஒன்றிற்கு) ரூ. | தற்போது வசூலிககப் படும்தொகை ரூ. |
|---|---|---|---|
| 1. | எச. ஆர். காவியப்பா காட்டேஜ | 50–00 | 100–00 |
| 2. | நாராயணகிரி காட்டேஜஸ் 1 to 4, 13 to 20 | 25–00 | 40–00 |
| 3. | டி. பி. காட்டேஜ் (உள்ளே) 1 to 8; ஏ to ஜி; III வது வரிசை 1 மற்றும் 16; சிஎம்சி; விவிசி-6; எஸ்என்சி; கேவி ஆர்; விவிசி-1; விவிசி-8; டிபிசி-10 | 20–00 | 30–00 |
| | (a) மேற்படி காட்டேஜின் A பகுதி | — | 18–00 |
| | (b) ,, ,, B பகுதி | — | 12–00 |
| 4. | டி. பி. காட்டேஜஸ் (வெளியே) விவிசி; எம்பிசி; ஏடிசி. | 16–00 | 25–00 |
| | (a) மேற்படி காட்டேஜின் A பகுதி | 9–00 | 15–00 |
| | (b) ,, ,, B ,, | 7–00 | 10–00 |
| 5. | டி.பி.காட்டேஜஸ்-IIIவது வரிசையிலுள்ள தனிஅறைகள் | 6–00 | 10–00 |
| 6. | எஸ்.வி.ஜி.எச்-இல் உள்ள பெரிய அறைத் தொகுதிகள் | 25–00 | 35–00 |
| 7. | எஸ்.வி.ஜி.எச்-இன் மூலையிலுள்ள அறைத் தொகுதிகள் | 20–00 | 25–00 |
| 8. | எஸ்.வி.ஜி.எச-இல் உள்ள வேறு அறைத் தொகுதிகள் | 16–00 | 20–00 |

**திருப்பதியில்**

| | | கிடைக்கும் அறைகள் எண்ணிக்கை | |
|---|---|---|---|
| 1. | தி. தி. தேவஸ்தானம் கஸ்ட் ஹவுஸ்: (இரணடு படுக்கை களைக் கொண்ட அறைத்தொகுதி ஒன்றிற்கு) | 18 | ரூ. 12/– |
| 2. | ஸ்ரீநிவாச சத்திரம (மாடியில்) (மேசை நாற்காலிகளைக் கொணட அறைகள்)இரண்டு படுக்கைகளைக் கொணட அறைத் தொகுதி ஒன்றிற்கு: | 30 | ரூ 12/– |
| 3. | ஸ்ரீநிவாச சத்திரம் (கீழ்ப்பகுதியில்) (மேசை நாற்காலி வசதிகளைக் கொண்டது) நான்கு படுக்கைகளைக் கொண்ட அறைத்தொகுதி ஒன்றிற்கு: | 40 | ரூ. 15/– |

குறிப்பு: மேசை, நாற்காலி போன்ற வசதிகள் இல்லாத சத்திரங்களில் தங்கும் அறைகள் யாத்திரிகர்களுக்கு இலவசமாக வழங்கப்படும்.

செயலாட்சித் தலைவர்.
தி. தி. தேவஸ்தானம், திருப்பதி'

# எம்பாரும் எம்பெருமானாரும்

ஸ்ரிய:பதியான ஸர்வேச்வரன் சேதனர்களான உலக மக்களைத் திருத்தி நல்வழிப்படுத்த ஆழ்வார்களையும் ஆசார்யர்களையும் அவதரிக்கச் செய்தான. ஸ்ரீமந் நாதமுனிகள் தொடக்கமான ஆசார்யர்கள ஆழ்வார்களின் அருளிச் செயல்களிலேயே மிகவும் ஈடுபட்டு அவற்றின் வாயிலாக வைணவத்தை வளர்த்தனா. ஆசார்யர்களில் சிறந்த ஆளவந்தார் திருவடிகளில், "உற்றதும் உன் அடியார்க்கு அடிமை" என்று நம்மாழ்வார் அருளியபடி ஆச்ரயித்த சீடர்களில் ஒருவர் பெரிய திருமலைநம்பி என்பவர். இவர் "ஒழிவில் காலமெல்லாம் உடனாய் மன்னி வழுவிலா அடிமை செய்ய வேண்டும் நாம்" என்று நம்மாழ்வார் அருளியபடியே திருவேங்கடமுடையானுக்கு நித்ய கைங்கர்யம் செயது வந்தார். இவருக்கு, ஸ்ரீபூமிப் பிராட்டியார், பெரிய பிராட்டியார் என்று இரண்டு சகோதரிகள் இருந்தனர். பெரிய திருமலை நம்பி ஸ்ரீபெரும்பூதூரில் உள்ள ஆசூரி கேசவப்பெருமானுக்கு ஸ்ரீபூமிப்பிராட்டியாரையும மழலை (மதுர) மங்கலத்தில் உள்ள கமலநயன பட்டருக்குப் பெரிய பிராட்டியாரையும் கொடுத்து மணம் செய்து வைத்தார்.

கலி தொடங்கி 43-ம் நாள் அவதரித்த முக்கால ஞானியான நம்மாழ்வார் ' கலியும் கெடும்கண்டு கொண்மின்" என்று இராமானுஜர் திருஅவதாரத்தைக் குறித்துத்திருவாய்மொழியில் அருளிச் செய்ததற்கு ஏற்ப, இக் கலியிருள் நீங்கிப் பாரெல்லாம் பேரின்ப வெள்ளம் பெருக கி. பி. 1017-ம் ஆண்டு சித்திரை மாதம் திருவாதிரை நட்சத்திரத்தில் கௌசலை, தேவகி முதலியவர்களின் கர்ப்பத்தில் ஸர்வேச்வரன் விரும்பிப் பிறந்தாற்போல் ஸ்ரீபூமி பிராட்டியாருக்குத் திருவனந்தாழ்வானது அம்சமாக அவதரித்தார் ஒரு மகாபுருஷர். பெரிய திருமலை நம்பி அவருக்கு ராமானுசன (இளையாழ்வார்) என்று திருநாமமிட்டு, இவர் காலக்ஷேபம் செய்ய வந்தார் என்றும் சகல சாஸ்திரங்களையும் கற்றுத் தலை சிறந்து விளங்குவார் என்றும் ஆசி கூறினார். பிற்காலத்தில் இவர் உடையவர் என்றும் எதிராசர் என்றும், எம்பெருமானார் என்றும், இப்படி மற்றும் பல சிறப்புப் பெயர்களாலும் வழங்கப் பெற்றார்.

அதேபோல், ஆசார்ய கைங்கர்யம் செய்யவும், இளையாழ்வாரின் திருவடி நிழலாகத் திகழவும், மதுரமங்கலத்தில் ஸ்ரீ பெரிய பிராட்டியாருக்கு கி பி 1021-ம் ஆணடு தைமாதம் புனர்வசு நட்சத்திரததில் ஸ்ரீ கோவிந்த பட்டர் என்பவர் அவதரித்தார். இவர் எலலா நற்குணங்களையுடையவராயும், உபயவேதாந்த ரகஸ்யங்களில் வல்லவராயும் விளங்குவர் என்று பெரிய திருமலை நம்பிகளின் நல்லாசி பெற்றார். பின்பு இவர் இராமானுசரால் "எம்பார்" என்னும் சிறப்புப் பெயர் இடப்பெற்று விளங்கினர். இவ்வாறு விளங்கின எம்பாருக்கு எம்பெருமானாரிடத்தில் உளள ஆசாரய ப்ரதிபத்தியையும மற்றும இவர்கள் இருவரின உரையாடல்களையும் நாம் சற்றுச் சிந்தித்து அனுபவிப்போமாக.

இராமானுஜரும் கோவிந்த பட்டரும் திருப்புட்குழியில் யாதவப்பிரகாசர் என்கிற அத்வைத வேதாந்தியிடம் வேதாந்தம் பயின்று வந்தனர். பல சமயம் இராமானுஜருக்கு வேதாந்தத்தில் இருந்த விசேஷ ஞானத்தைக் கண்டு, பொறாமை கொணடு அவரை மாய்கக எணணினர் யாதவர். சீடர்களுடன் காசி யாத்திரையாகச் செல்லத் தொடங்கினர். கோவிந்தபட்டர் யாதவரின் சதியை அறிந்து தருணம் பார்த்து இராமானுஜரைக்காப்பாற்ற எண்ணி, எல்லோருடனும் நடந்து சென்று கொண்டு, இராமானுஜரை யாரும் அறியாமல் அவருக்கு யாதவரின் சதியின் காரணத்தைச் சொல்லித் தப்பியோடும்படி கூறினார். இராமானுஜரும் "வழி திகைத்தலமருகின்றேன்" என்று மதி கலங்கி நிற்க, அத்திகிரிப் பேரருளாளப்பெருமானுடைய பேருதவியால் காஞ்சிக்கு வந்து சேர்ந்தார்.

யாதவரின் மந்திர சக்தியால், கோவிந்தபட்டர் கங்கையில் நீராடும போது ஒரு லிங்கம் அவர் கையில் வந்து சேர, தமது பிறந்த ஊரான

---

திரு. மாடபூசி வரதராஜன்-திருபபதி.

---

மதுரமங்கலத்தில் அந்த லிங்கத்தை ப்ரதிஷ்டை செய்து "உள்ளங்கை கொணர்ந்த நாயனர்" என்ற பெயர் பூண்டு காளஹஸ்தியில் சிவாலயபூஜாதி கார்யங்களைப் பராமரிப்பவராய் வசித்து வந்தார். இதை அறிந்த இராமானுஜர் திருமலைநம்பி வாயிலாக அவரைத் திருத்தி அப்பெரிய திருமலை நம்பிகளின் திருவடிகளில் சரணமடையச் செய்தார். பின்பு கோவிநதபட்டரும மிக்கநல்லொழுக்கமுடையவராய் ஆழ்வார்களுடைய திவ்யப் பிரபந்தங்களையும் அவற்றின் உள்ளீடான அர்த்த பஞ்சகத்தையும் பெரிய திருமலை நம்பி பக்கலில்கேட்டு அவர் திருவடிகளிலே சிந்தையாலும், சொல்லாலும், செய்கையினாலும் எல்லாவித கைங்கர்யங்களையும்செய்து கொண்டு வாழ்ந்து வந்தார்.

இது இவ்வாறாக, இராமானுஜரும் பெரிய திருமலை நம்பிகளிடம் வேத ஸாரமாய் இருக்கும் த்வய அர்த்த விசேஷங்களைக் கேட்டு, திருமலைநம்பி சொல்படி, ஆளவந்தாருடைய அபிமானத்திற்குப் பாத்திரமான திருக்கோட்டியூர் நம்பிகளிடம் சென்று மற்றும் சில அர்த்த விசேஷங்களை அறிய ஆவல் கொண்டார். ஆளவந்



தேவியருடன் ஸ்ரீரஙகநாதர்-வேலூர்.
S. V. K. S. ஸ்ரீநிவாசன-திருப்பதி.

தார் திருவடிகளில் அடிபணிந்து கேட்காத குறைதீர, திருக்கோட்டீயூரில் வாழும் நம்பிகளிடம் 18முறைசென்று முடிவில் அவர் திருவருள் பெற்று வைணவர்கள் நாத்தழும்பெழ எப்போதும் சொல்லும்படியான 'நலந் தரும் சொல்' என்கிற பெரிய திருமந்த்ரத்தின் பரமரகஸயார்த்தங்களை உபதேசமாகப் பெற்ருர். இப்பரம ரகஸ்யார்த்தத்தை அறிய ஆசையுடையோர்க்கெல்லாம் இராமானுஜர் வெளியிட்டதைக் கேட்ட திருக்கோட்டியூர் நம்பிகள் கோபம்கொண்டு இராமானுஜரை அழைத்து ''இப்படியும் செய்யலாகுமோ? இதன் பலன் என்ஞகும் என்றுஅறிவீரோ?'' என்று கேட்க, இராமானுஜரும் ''தேவரீரது நியமனத்தை மீறி வெளியிட்டதன் பயஞக அடியேனுக்கு நரகம் வந்தாலும் இம்மக்கள் எல்லோரும் தேவரீருடைய திருவடி ஸம்பந்தததாலே உய்ந்துபோவர்களே என்று நினைத்தே அவர்களுக்குக் கூறினேன'' என்று கூறினுர். நம்பியும், இராமானுஜரின் கருணையுள்ளம் நமக்கு இல்லையே என்று எண்ணி, அவரை உகந்து 'எம்பெருமாஞரே! வாரும்'' என்று அணைத்துக்கொண்டு மிகவும் மகிழ்ந்தார். மேலும் வைணவ மதத்திற்கும் ''எம்பெருமாஞர் தாசனம்'' என்றும் பெயரிட்டார்.

எம்பெருமாஞர் திருப்பதியில் திருமலை நம்பிகளிடம் ஒரு வருட காலம் ஸ்ரீராமாயணத்திற்கு அர்த்தம் கேட்டுக கொண்டு இருந்த காலத்தில், ஒரு நாள் கோவிநதபட்டர் எல்லாக் கைங்கர்யங்களையும் முடித்துக் கொண்டு நம்பிகளுக்கு திருப்படுக்கை போட்டு முன்புதான் படுத்துப்பார்த்தார். இதைக் கண்ட எம்பெருமாஞர் திருமலை நம்பிகளிடம் சொல்ல, நம்பிகளும் 'இப்படி செய்யலாமோ' என்று கோவிநத பட்டரைக்கேட்க, அவரும் ''எனக்கு இதன் பயஞக நரகம் வந்தாலும் ஆசார்யரான தேவரீர் திருமேனியில் உறுத்துதல், ஊறுதல், கடித்தல் முதலியவைகள் இல்லாமல் இருக்க வேண்டுமென்றெண்ணியே அப்படிச் செய்தேன்'' என்ருர். இப்படி ஒரு ஆசார்யரிடம் உள்ள பரிவு விசேஷத்தைக் கண்டு எம்பெருமாஞரும் நம்பிகளும் உகந்தனர்.

ஒரு சமயம் திருமலை நம்பிகளின் திருநந்தவனத்தைப் பார்வையிட்ட எம்பெருமாஞர் ஓரிடத்தில் கோவிந்த பட்டர் பாம்பின வாயிலே கைவிட்டு மீணடு நீராடி கைஙகர்யத்திலே இருப்பதைக் கண்டு, ''கோவிநத படடரே! என்ன செய்தீர்'' என்று கேட்க, அவர், ''பாம்பு நாக்கை நீட்டிக் கொணடு இருக்கக்கணடு அதன் நாவிலுள்ள முட்களை எடுத்தேன்'' என்று விண்ணப்பம் செய்தார். எம்பெருமாஞர் கோவிநதபட்டரின் உயிரினத்தின் மேலுள்ள இரக்கத்தைக் கண்டு மெச்சினுர்.

பின்பு எம்பெருமாஞர் இராமாயணக் காலக்ஷேபம் முடிவுபெற்று திருவரங்கம் எழுந்தருள திருமலை நம்பிகளிடம் விடை கேட்க, அவரும் எம்பெருமாஞருக்கு ஒன்றும் தரப்பெற்றிலோமே என்று மனம் நொந்தார். திருமலை நம்பிகளின் திருவுள்ளத்தையறிந்த எம்பெருமாஞர், கோவிந்த பட்டரை உடன் அனுப்பி வைக்குமாறு வேண்ட நம்பிகளும் கோவிந்த பட்டரை எம்பெருமாஞரோடு அனுப்பிவைத்தார். பின்னர் இருவரும் வண்டு வளங்கிளரும் நீள் சோலையான திருகடிக்கைக்குச் (சோளங்கிபுரம்) சென்று, பெருமாளைச் சேவித்துவிட்டு திருப்புட்குழியில் பெரிய உடையாரைச் (ஜடாயு) சேவித்து திருக்கச்சி நம்பி சநநிதியான பூவிருந்தமல்லி எழுந்தருளினுர்கள்.

''அவனை விட்டகன்றுயிராற்றகில்லா'' என்கிறபடியே, கோவிந்த பட்டர் திருமலை நம்பியைப் பிரிந்த ஏக்கத்திஞல் முகம் வாடி இளைத்து வருவதைக் கணட எம்பெருமாஞர் அவரைத் தகுந்த துணையுடன் திருமலைக்கு அனுப்பி வைத்தார். கோவிந்த பட்டர் திருமலைக்கு வந்து திருமலை நம்பிகள் திருமாளிகைக் கதவைத் தட்ட நம்பிகள், கோவிந்தபட்டர் என்று அறிந்ததும், தேவியின் வார்த்தையையும் கேளாமல் 'விற்ற பசுவிற்கு புல்லிடுவார் உண்டோ' என்று கூறி, கதவைத் திறக்காமல் இருக்க, கோவிந்தபட்டர் அத்திருவாசலிலே தண்டனிட்டு மீண்டும் எம்பெருமாஞரைச் சேர்ந்தார். இவ்விருத்தாந்தத்தைக் கேட்ட எம்பெருமாஞர் நம்பிகள் திருவுள்ளம் அறிந்து கோவிந்த பட்டரைத் தம் ஸௌலப்ய ஸௌசீல்யாதி குணங்களால் ஈடுபடுத்திக் கொணடார்.

''இராமானுசன் மிக்க சீலமல்லால் உள்ளாதெனநெஞ்சு'' என்றும், ''உன்தன் மெய்யில் பிறங்கிய சீரன்றி வேண்டிலன் யான்'' என்றும் எம்பெருமாஞர் குணஙகளின் அனுபவமும், அவர் திருமேனி அனுபவமுமே நமக்குத் தஞ்சம் என்று கோவிந்தபட்டர் அப்படியே இருந்து வந்தார். இவ்வாறு ஸம்ஸார சம்பந்தத்தை அறுத்து வைராக்கியத்துடன் வைர நெஞ்சை வளர்த்த கோவிந்தபட்டர் துறவறம் பூண நினைக்க, எம்பெருமாஞரும் கோவிந்தபட்டரை உகந்து முக்கோல்

)டிக்கச் சொல்லிக் காவிவுடை அணி ]த்து தன் திருநாமத்தைச் (எம்பெரு மானுர்) சுருக்கி "எம்பார்" என்று திருநாமம் இட்டு வாரி அணைத்துக் கொண்டார். பின்னர் எம்பெருமா னுரின் திருவடி சம்பந்தத்தால் உபய வேதாந்தங்களைக் கசடறக்கற்று தலை சிறந்து விளங்கினுர்.

ஒரு நாள் எம்பெருமானுரின் சிடர் கள் குழாம் கூடி எம்பாரின் ஞான பக்தி வைராக்யங்களையும், ஆசார்ய கைங்கர்யத்தின் எல்லை நிலத்தையும், அனுஷ்டானத்தையும் சொல்லிக் கொண்டாட, எம்பாரும் அது தகும் என்று அவர்களைக்காட்டில் மிகவும் தம்மைத்தாமே புகழ, எம்பெருமானுர் இதைக்கண்டு "எம்பாரே! உம்மைப் புகழ்ந்தால், நீர் தன்னடக்கத்துடன் இல்லாமல், நீரே உம்மைப் புகழா நின்றீர். இப்படிச் செய்வது தகுமோ" என்று வினவ, எம்பாரும் எம்பெரு மானுரைப் பார்த்து, "ஐயோ! அடி யேனைக் கொண்டாடில், காளஹாஸ்தி யில் கையில் குடமும், கழுத்தில் இலந் தைக் கொட்டை மாலையுமாய்த்திரிந்த என்னை 'பீதக வாடைப்பிரானுர் பிரம குருவாகி" வந்து திருத்தி, "பணி மானம் பிழையாமே அடியேனைப்பணி கொண்ட" என்றும "பொருளல்லாத என்னைப்பொருளாக்கி அடிமைகொண் டாய்" என்றும் கூறுகிறபடியே என்னை ஆட்கொண்ட தேவரீர் திருவடிகளை யல்லவா அவர்கள் புகழ்கின்றனா என்று பதில் கூறினுர். இதைக்கேட்ட எம்பெருமானுர் அவரை 'நல்லீர் நல் லீர்' என்று உகந்து வாரி அணைத்துக் கொண்டருளினுர்.

எம்பெருமானுரின் பேரன்புக்குப் பாத்திரமாக விளங்கின எம்பார் கல்வி கேள்விகளில் தலைசிறந்தவராய் ஆசார யரிடத்தில் உள்ள அளவிலாப் பரிவால் எம்பெருமானுரைத் தேனெழுகும் எளிய தமிழில் புகழ்மாலை தொடுத் துப் பரவசப்படுத்துகிறுர். அவரது கவிதை நயத்தை கீழ்ச்சில வரிகளில் அனுபவிப்போம்.

" பற்பமெனத்திகழ் பைங்கழலுந்தன்
பல்லவமே விரலும,
பாவனமாகிய பைந்துவராடை
பதிந்த மருங்கழகும்,
முப்புரி நூலொடு முன்கையிலேந்திய'
முக்கோல் தன்னழகும்
முன்னவர் தந்திடு மொழிகள்
நிறைந்திடு முறுவல் நிலாவழகும்,
கற்பகமே விழி கருணை பொழிந்திடு
கமலக் கண்ணழகும்,
காரிசுதன் கழல் சூடிய முடியும்
கனநற்சிகை முடியும்,
எப்பொழுதும எதிராசன
வடிவழகென் இதயத்துளதால்
இல்லை எனக்கெதிர், இல்லை
எனக்கெதிர், இல்லையெனக்கெதிரே!"

எம்பெருமானுரை ஒரு போதும் விட்டு அகலாத திருவடி நிழலாகத் திகழ்ந்த எம்பார், திருமங்கைமன்னன் அருளிய திருமொழி ஆயிரமும் தனது மனத்தில் நிலைத்து நிற்கும்படி செய்ய எம்பெருமானுரை கீழ்க்கண்ட பாட் டால் வேண்டுகிறர்.

" எங்கள் கதியே இராமானுசமுனியே
சங்கை கெடுத்தாண்ட தவராசா
—பொங்குபுகழ்
மங்கையர் கோனீந்த மறையாயிர
மனைத்தும்
தங்கு மனம் நீ எனக்குத்தா!"

இவ்வாறு ஆசார்ய கைங்கர்யமே பரம ப்ரயோசனமாகக்கொண்டு இறை யும் விட்டுப் பிரியாது விளங்கின எம் பாரின் திவ்யமங்களத் திருமேனியை அவர் அவதாரஸ்தலமான மதுர மங்க லத்திற்கு (சென்னைக்கு 30கல் தொலை வில் உளளது) சென்று கண்ணுரக் கண்டு அனுபவிபபது நாம் பெற்ற பேறுகும்.



---

(12-ம் பக்கத் தொடர்சசி)

மட்டுமே அவர் தமது ஆயுதத்தைப் பயன்படுத்தினுர். தாடகை வதமா கட்டும் அல்லது இராவண சம்ஹார மாகட்டும்—துஷ்ட நிக்ரஹ சிஷ்ட பரிபாலனம் என்பதுவே அவரது செயல்களின் இலட்சியமாய மைந்தது. ஆயுதத்தைக் கண்டபடி உற்பத்தி செய்து கண்மூடித் தனமாக அவற்றை துஷ்பிரயோகம் செய்யும் இன்றைய வல்லரசுகளும் ஏனைய நாடுகளும் இதி லிருந்து நல்லதொரு பாடத்தைக் கற்றுக் கொள்ள வேண்டும். மறத்தை முறியடித்து அறத்தை நிலைநாட்டு தற்கே ஆயுதம் பயன்படுத்தப்பட வேண்டும் என்ற நிலை உருவாக வேண் டும். அத்தகைய தொரு உயர்ந்த இலட்சியத்தைக் கொணடு விளங்கிய ஸ்ரீராமபிரானுக தாம் ஆயுத மேந்தி யவர்களுள் திகழ்வதாகப் பகவான் கூறுகிறுர்.

நீர் வாழ் இனங்களில், குறிப்பாக மீன்களுள் சுருமீன் ஆற்றல் மிகப் பொருந்தியதாகக் கருதப்படுகிறது. சுருவுக்கு மகரம் என்பது மற்றொரு பெயர். ஆற்றல் மிகுதியால் அது பக வானுடன் ஒப்பிடப்படுகிறது.

பகீரதனின் முயற்சியால் ஆகாய கங்கை பூலோகத்திற்கு வந்தது; அது வரும் வழியில் ஜஷ்னு என்ற முனி வர் தவத்தில் ஆழ்ந்திருந்தார்; தம் மீது நதி மோதுவதைக் கண்டு கோப மடைந்து, தமது தபோ வலிமையால் கங்கையை விழுங்கி விட்டார். பின் னர் பகீரதனது வேண்டுகோளுக் கிணங்க தமது காது வழியாக அதை வெளிவிட்டதாகப் புராணம் கூறு கிறது. ஜஹ்னு முனிவரிடமிருந்து வெளி வந்ததால் அது ஜஹ்னுபுத்திரி அல்லது ஜாஹ்னவியாகக் கருதப்படு கிறது. நதிகளுள் கங்கா நதி மிகவும் புனிதம் வாய்ந்தது. புராணம் மற்றும் சமய அடிப்படையில் மட்டும் அல் லாமல் இன்றைய நவீன விஞ்ஞான அடிப்படையிலும் கங்கையின் புனிதத் தன்மை நிரூபிக்கப்பட்டிருக்கிறது. மற்ற நதிகளின் நீரெல்லாம் சீக்கிரத்

தில் கெட்டுவிட, கங்கை நதியின் நீரை பாட்டிலில் அடைத்து வைத்திருந்தால் அது வெகுகாலம் கெடாமல் இருக்கிறது. காசி போன்ற இடங்களில் பிணங்கள் நதியில் மிதந்து வந்தாலும் கூட கங்கை நீரின் புனிதம் சுகாதார முறைப்படி கெடாமலிருப்பது கண்டுபிடிக்கப்பட்டிருக்கிறது. அது மட்டுமல்ல லண்டனிலிருந்து கல்கத்தாவிற்கு வரும் கப்பல்கள் வழியில் பன்முறை நீரை மாற்ற வேண்டியிருக்கிறது ஏனெனில் அங்குள்ள நீர் சீக்கிரமே கெட்டு விடுவதுதான் அதற்குக் காரணம். ஆனால் கல்கத்தாவிலிருந்து கங்கை நீரை எடுத்துச் செல்லும் கப்பல்கள் லண்டன் போகும் வரை அந்த நீர் கெடாமலிருப்பதால் வழியில் வேறு எங்கும் நீரை மாற்ற வேண்டிய தேவையே ஏற்படுவதில்லை. இது அனுபவ வாயிலாக மாலுமிகள் கண்ட முடிவு. தவிர நோய்க் கிருமிகள் கங்கை நீரில் சாகடிக்கப்படுகின்றன. இத்தகைய பல்வேறு தனிச் சிறப்புக்களாலும், பக்தியுடன் அதில் ஸ்நானம் செய்பவர்களின் பாபங்களைப் போக்கிப் பக்தர்களைப் புனிதப்படுத்துவதாலும் நதிகளுள் தம்மை கங்கையாகப் பகவான் குறிப்பிடுகிறார்.

தங்கச் சங்கிலி ஒன்று காண்போர் உள்ளத்தைக் கவருகிறது. சங்கிலியை அழித்து மோதிரமாகச் செய்யலாம். இவ்விதம் ஒரு சமயத்தில் சங்கிலி என்ற பெயருடன் விளங்கியது இன்னொரு சமயத்தில் மோதிரமாகவும், மற்றொரு சமயத்தில் வளையலாகவும் காட்சி தருகிறது. இத்தனை பெயர்களுடன் விதவிதமாகக் காட்சி தரும் ஆபரணங்களாகக் காட்சி தரும் போதும், அவற்றை அழிக்கும் போதும் விளங்குவது ஒரே பொருள் தான். அது தான் தங்கம். அதுவே அந்த ஆபரணங்களின்மூலப் பொருள். ஆபரணங்களின் புறத்தோற்றம், மற்றும் பெயர்களிடையே மாற்றங்கள் ஏற்படினும் மூலப் பொருளாகிய தங்கத்தில் எந்தவித மாற்றமும் ஏற்படுவதில்லை. அதுபோல சிருஷ்டிப் பொருள்கள் சூரியன், சந்திரன், மரம், செடி, கொடி, பறவை, பல்லி, மனிதன், பாமபு என்று பல்வகையாகப் பல பெயர்களுடன் தோன்றிடினும், அவை அனைத்தும் அந்தத் தோற்றத்திற்கு வருவதற்கு முன்னும், அந்தத் தோற்றங்களை இழந்த பின்னரும் அவற்றிற்கு ஆதாரமாக விளங்குவது மூலப் பொருளாகிய பகவானேயன்றி வேறு அல்ல. எனவே சிருஷ்டியின் ஆதி, நடு, அந்தம் தாமே என்று பகவான் மொழிகிறார்.

ஒருவன் பெற வேணடிய அறிவு பல வகைப்படும். அறிவுக்கு எல்லை கிடையாது. கல்வி கரையில என்பது அறிஞர் கருத்து. கற்கும் தொறும் கல்லாமை கணடற்றே என்பது தான் பேரறிஞர்கள் கண்ட முடிவு. மேலும் மேலும் கல்வி கற்கையில் இன்னும் கற்க வேண்டியது எல்லை கடந்து கற்பனையிலடங்காது போகிறது. இந்த நிலையில் யாராவது 'எனக்கு எல்லாம் தெரியும்' என்று கூறினால் அவர்களை அறிவிலிகள் என்று நாம் கொள்ளலாம். அறிவை நாம் இரண்டு பகுதிகளாகப் பிரிக்கலாம். ஒன்று இயற்கையைப் பற்றிய அறிவு. அது விஞ்ஞானம். மற்றது இறைவனைப் பற்றிய அறிவு. அது மெய்ஞானம். முந்தியது சிற்றறிவு அல்லது நூலறிவு. பிந்தியது மெய்யறிவு அல்லது மாற்றமில்லாப் பூரணப் பொருளான இறைவனைப் பற்றியது. முந்தியது சிற்றின்பம் அல்லது தாற்காலிக இன்பத்தை அளிக்க வல்லது. பிந்தியதோ பேரின்பம் அல்லது நிரந்தர இன்பத்தை அளிக்க வல்லது. விஞ்ஞானத்தை மட்டும் ஓரளவு கற்று மெய் ஞானத்தைத் தெரியாது நாம் விட்டு விட்டால் நமது அறிவு அரைகுறை அறிவாகப்போய் விடும். வாழ்வும் வீணாகி விடும். எனவே வித்தைகளுள் ஆத்ம வித்தையே பிரதானமானதாக அமைகிறது. ஆத்ம வித்தை என்பது பிரம்ம வித்தை அல்லது பரவித்தையே யாகும்.

'தன்னையறியத் தனக்கொரு கேடில்லை' என்பர் சான்றோர். 'நான் அடிப்படையில் யார்?' என்று நாம் ஆராய்ந்து கொண்டே போனால் நான் இந்த உலகம் அல்ல, உலகப் பொருள்கள் அல்ல, உடல் அல்ல, மனம் அல்ல, இந்திரியங்கள் அல்ல, புத்தியல்ல...... இது அல்ல, இது அல்ல... ...(நேதி, நேதி)......என்று கேள்வியும் கேட்கப்படுவோனும் ஒன்றித்த ஒரு நிலைக்குச் சென்று விடுவோம். அந்த நிலையில் 'நான் ஆத்ம சொரூபம்' என்ற உணர்வு ஒருவனிடம் எழும். 'இந்த ஆத்மாவே பிரம்மம்', (அயம் ஆத்மா பிரம்ம), 'அஹம் பிரம்மாஸ்மி', 'பிரக்ஞானம் பிரம்ம' 'தத் த்வம் அஸி' போன்ற மஹா வாக்கியங்கள் நாம் அடிப்படையில் பிரம்ம சொரூபம் என்பதை நிரூபிக்கின்றன. அந்த ஆத்ம போதம நம்மிடம் எழுகையில் அந்தப் பெரு நிலையில் நம்மிடம் உள்ள ஆசைகள் அனைத்தும் ஞானக்கினியில் வெந்து சாம்பலாகிவிடும். ஆசையே பிறவிக்குக் காரணம். ஆசைகள் அற்றால் பிறவியும் இல்லாது போகிறது. எனவே வித்தைகளுள் பிறவிப் பெரும பிணியை இல்லாதாக்கவல்ல ஆத்ம வித்தையே தாம் எனப் பகவான் கூறுகிறார். இதிலிருந்து என்ன தெரிகிறது? நாம் எத்தனை எத்தனை பட்டங்கள் பெற்றாலும, நகரும் நூலகமாகத் திகழ்ந்தாலும், பெற வேண்டிய மெய் அறிவு அல்லது ஆத்ம ஞானத்தைப் பெறத் தவறி விடுவோமேயாகில், நாம் பெற்ற அறிவு ஒன்றுக்கும் உதவாததாகி விடும் என்பதை யாண்டும் நினைவிலிருத்த வேண்டும்.

(தொடரும்)

தொடர் கட்டுரை :

# முக்கவி கண்ட காப்பியம்

## "சுந்தர காண்டம்"

திரு பி. ஜி. அனந்த சுப்ரமண்யம்,
(காபேயன)
திருப்பதி.

இராவணன் முடிவைப்பற்றி அத்யாத்ம இராமாயணம் குறிப்பிடுகையில், திரிசடை கண்ட தீக்கனவைப் பற்றி சொல்லப்படுகிறது.

**रावणो गोमयह्रदे तैलाभ्यक्तो दिगम्बरः ।**
**अगाहत्पुत्रपौत्रैश्च कृत्वा वदनमालिकाम् ।।**
**सर्वथा रावणं हत्वा रामो सकुलमञ्जसा ।।**
**विभीषणायाधिपत्यं दत्वा**

அதாவது இராவணன் சாணக் குட்டையில், எண்ணெய் தேய்த்துக் கொண்டு, வஸ்த்ரமில்லாதவனாக, ஸ்நானம் செய்து, மண்டை ஓடுகளை மாலையாகத் தரித்துக் கொண்டும் தெற்கு நோக்கிச் செல்லுகிறான். இராமன் எப்படியும் குலத்தோடு இராவணனை அழித்துவிட்டு விபீஷணனுக்கு அரசைக் கொடுக்கப் போகிறான் என்று திரிசடை கூறுகிறாள். இங்கு நோக்கத் தகுந்தது ஒன்று உளது. வால்மீகியும், கம்பரும் விபீஷணனுக்கு அரசு கொடுப்பதாகக் கூறவில்லை. மற்ற இரு இராமாயணங்களும் கூறுகின்றன.

சீதை அசோகவனத்தில் இருந்த காட்சியை வால்மீகி வர்ணித்தது போலவே, துளசிதாஸரும் வர்ணித்துள்ளார். அதாவது அவருடைய கருத்தை அப்படியே ஹிந்தி மொழியில் வடித்துள்ளார் என்பது குறிப்பிடத்தக்கது.

**कृस तनु सीस जटा एक वेनी ।**
**जपति हृदयं रघुपति गुन श्रेणी ।।**

அதாவது, இராமனை விட்டுச் சீதை எந்நிலையில் பிரிந்தாளோ, அந்த நாளில் கட்டிய ஆடை, அன்று பின்னிக் கொண்ட தலைப் பின்னல், ஆகியவற்றோடு தரையினையே படுக்கையாகக் கொண்டவளாக இருந்தாளாம். கணவனைவிட்டுப் பிரிந்த பதிவ்ரதைகள் இருக்க வேண்டிய நிலையை தாம சாஸ்த்ரம் கூறுகிறது.

**क्रीडा शरीर संस्कार समाजोत्सवदर्शनम् ।**
**हास्यं परगृहे यान त्यजेत्प्रेषितभर्तृका ।।**
**(याज्ञवल्क्यस्मृति)**

இத்தகையச் சூழ்நிலையில இராவணன் மறு முறையும் சீதையைச் சந்தித்துத் தன்னைத் திருமணம் செய்து கொண்டால் பலவித சுகபோகங்களை அனுபவிக்கலாமென்று கூறி வணங்கா முடியான இராவணன் சீதையின் காலில் விழுகிறான் என்று கம்பர் கூறுகிறார்.

"குடிமை மூன்றுல குஞ்செயும
கொற்றத்தேன்
அடிமை கோடி யருளுதி யாலென
முடியின் மீது முகிழ்த்துயர்
கையினன்
படியின் மேல் விழுந்தான் பழி
பார்க்கலான்"

இராவணன், த்ரிலோகாதிபதியாகிய தன்னை ஆட்கொள்ள வேணுமென்று தலையின் மேல் கை கூப்பிச் சீதா பிராட்டியை வேண்டிக் கொண்டு எட்டுறுப்பும் பூமியில் படியும்படி விழுந்து வணங்கினான். இராவணன் காமத்தால் மதிகெட்டு இவ்விதம் செய்திருக்கலாம் என்பது கருத்தாகும். ஏனெனில் மற்ற இராமாயணங்கள் இச்சம்பவத்தைக் கூறவில்லை. இராவணன் சீதையினிடம் தன் காம உணர்ச்சியைப் பலவாறான வார்த்தைகளின் வழியாகக் கூறினான் என்றுதானுள்ளது.

சீதை இராவணனின் வார்த்தையைக் கேட்டு இருவருக்கும் நடுவில் புல்லைத் தூக்கிப் போட்டுவிட்டு சொல்ல ஆரம்பிக்கிறாள்.

**तृणमन्तरतः कृत्वा प्रत्युवाच शुचिस्मिता**

ஆத்திரம் கலந்த புன்னகையுடன் புல்லைப் பார்த்துப் பேசுகிறாள். இங்கு புல்லைப் போட்டுப் பேசுவானேன் என்று சந்தேகம் எழக்கூடும், இதற்குப் பல காரணங்கள் கூறலாம். அவைகளாவன:

1. ஒரு பதிவ்ரதை தன் புருஷனைத் தவிர மற்ற புருஷனை நேரிடையாகப் பார்த்துப் பேசக்கூடாது என்பதாலோ.
2. தான் (சீதை) சொல்லப்போகும் வார்த்தைகளைப் புற்போல் நினைக்கக் கூடாது என்றோ.
3. சிதாப் பிராட்டியின் கண்கள் பட்டு ஒரு வேளை இராவணன் திருந்தி நல்லவனாகிவிட்டால் இராமன வந்த காரியம் முடிவுறாமற்போகுமோ என்றோ!

(தேவியின் கருணை நிறைந்த கண்கள் பற்றி கூறப்படுகிறது.

**स श्लाघ्यः स गुणी धन्यः स कुलीनः स बुद्धिमान्**
**स शूरः स च विक्रान्तो यं त्वं देवि निरीक्षसे ।**
**तृ नघरि ओट कहति वैदेही ।**
**तुमिरि अवधपति परम सनेही ।।**

"ஹே தேவி! நீ எவனைப் பார்க்கிறாயோ அவன் எப்படியெல்லாம் ஆகிவிடுகின்றான் தெரியுமா?

போற்றத் தகுந்தவனாகவும், பண்புள்ளவனாகவும், பெரும்பேறு பெற்றவனாகவும், நற்குலத்திலுதித்தவனாகவும், புத்திமானாகவும, சூரனாகவும் ஆகிவிடுகிறான்.")

4. தாப்பைப் புல்லால் எவ்விதம் காகாஸுரன் அவதிப்பட்டானோ அதேபோல நீயும் ஆகிவிடுவாய் என்றோ!
5. நீ சேதனனாக இருந்தாலும் என் விஷயத்தில் அசேதனனாக இருக்கிறாயே என்றோ!
6. மிருகத்திற்குச் சமமான உனக்கு இந்த புல்தான் கதி என்றோ! என்பதாகும்.

இக்கருத்துக்களை எல்லா இராமாயணங்களும் ஒப்புக்கொண்டுள்ளன. (தொடரும்)

(7-ம் பக்கத் தொடர்ச்சி)

ஆவிகள் ஒருவர் கையைப் பிடித்து இழுக்க, அவைகளின் எழுத்துக்களை எழுதுதல் Auto writing எனப்படும்.

திடீரெனச சாவுககுட்பட்டவரின் நுண்ணுடல, இறப்பு நேர்ந்த இடத் தின் பக்கங்களில் உலவித் திரியும். அதைக் கண்டதாகக் சொலலப்படும் ஒரு மனிதனின் நிலை பரிதாபகர மானது

பேய்ப் பீதி :

மனதின் பேருணர்ச்சி, கண்களின் சக்தியைத் தோற்கடிக்கும். அவை களைக் கணடு பதைபதைததல் கூடாது. அப்போது ஊக்கமும், சிந்தனைத் தெளி வும் அவசியம், திடம் படைத்தவர்கள் அத்திடத்தை இழுக்க நேரும்போது, சிறிது நிதானம் கொளள வேணடும்.

தன்னை அறியத் தனக் கொரு
கேடில்லை
தன்னை அறியாமல தானே கெடு
கின்றான்
தன்னை அறியும் அறிவை அறிந்த பின்
தனனையே அர்ச்சிக்கத்தான் இருந்
தானே
—திருமூலர்.

தன் பார்வைக்குத் தெரியும் பீதி யைக் கண்டு, அஞ்சி ஒடுங்காமல் சமாளித்து அதனை எதிர்க்கும் சக்தி கொணடு திடமனம் கொண்டால, அது பேயானாலும் ஆவியானாலும் அதுவே நெருங்காமல், பயநது மறைந்துவிடும்.

உயிர் விடும்முன்னே .

மேலும நாம் செய்யும வினைகளுக்கு ஏற்பத்தான் நாம் உயிர்விடும் நாளு மிருக்கும்.

உத்திரட்டாதி பூரட்டாதி ரேவதி
யுரோகணியவிட்ட சதைய
பொருவருடதோடந்தானுற்ற பஞ்சமி
யிலே
யோராறுமாத தோடஞ்
சித்திரை புனர்பூச முததிரங் கார்த்
திகை
செய்யமான்றலே விசாகஞ்
சித்தி தரு முத்ராடமிவ வேழுமே
மூன்று
திங்கள வரையுந் தோஷமாம்
நத்து மூலங் கேட்டையாகு மிரு
நாட்களு
நாற்பது தினந் தோஷமாம
நலமாக மேற்கணட நட்சத்திரந்தவிர
நன்றதாமற்ற நாட்கள்

கத்தனே புலகினுயிா செதத
நாட்டோஷமிது,
—சிதம்பரம் பிள்ளை-கைலாசநாதர்
சதகம்.

எனவே, இறைவனை கீழ்க்கணட மந்திரத்தால் தொழுது அரற்றிட நல் ஒளி கிட்டும்.

முனனை நீர் செய் பாவத்தால் மூாததி
பாதம் சிநதியா
தின்னை நீர் இடும்பையில மூழ்கிறீர்
ஏழும் மினே
பொன்னை வென்ற கொனறையான்
பூதம் பாட ஆடலான்
கொன்னவிலும வேலினுன் கோடி
காவு சோமினே
வாழினும் சாவினும் வருந்தினும
போய்
வீழினும் உன் கழல் விடுவேன்
அலலேன்
தாழிளந்தடம் புனல் தயங்கு
செனனிப்
போழிளமதி வைத்த புண்ணியனே...
இதுவோ எமை ஆளுமாறு ஈவ
தொன்றெமக்கில்லையேல
அதுவோ உனதின்னருள் ஆவடு
துறை அரனே.



# ஸ்ரீ க்ருஷ்ண ஜந்மாஷ்டகம்

திரு. ந. சி. ராஜகோபாலன், [illegible]

1. யசோதரையின் மகளுக எநதனித்த பொழுதினிலே
அசோகமதை கணடிடடாதாம்—காசினியில
அரக்கரெலாம அழிந்திடவே அறுதிபிட்டார் அனறவனே
கரம் கொடுபபான் அவனொருவனதான்.

2. மாதவத்தை செயதிட்டாள் மாதா தநதை பெறறிடவே
மாதவனை மாற்றியதும் மாசறவே—வேதமதில
சால உரைக்கப் பெற்ற பண்புடையோன் மேதினியில
பாலகனுப் வநதிட்டான் நோக்கு.

3. பிறந்ததுவும் பாலருந்தும பேறில்லை பிள்ளைக்கு
மறந்ததுவே தேவகி தம் முலையதனை—சுரநதிடுமோர்
யசோதரையின் அம்மருந்துபவனுகி நிற்கினறன
பசுதனைக்கு அரசனவன் பாலன்.

4. நள்ளிரவில் நாயகனும நாயகனை கொண்டாடும்
எள்ளி நகையாடுகின்ற கமசனவன—துள்ளி வ நம்
முன்னரவர் செல்கின்றல் மூலமதை தாங்கலுடன்
துன்பம் தனை நீக்கிடவே தாம்.

5. வசுதேவர் சென்றிடவே வழியினிலே மழை பெய்ய
பசுபாலன் காபபதற்கு வழியறியார்—சிசுவதனை
ஆதியதும் அந்தமதும் அரங்கனவன் அரவமுதும்
நீதின்றே காத்ததுவாம் செப்பு.



6. தேவகியின் இலமடைந்து தேவனவனை வைத்து
பாவமனம் விட்டொழிதத வசுதேவா—தூவமலா
பெண் மகவை ஏந்திட்டே போந்ததுவும் தம்மூரே
கண் மகவை வைத்திட்டார் பாடு.

7. கமசனவன் பிறப்பித்த ஆணையது பிரகாரம
வம்சமதை கொல்வதற்கே வந்திட்டான்—அம்சமது
விட்டுணுவின் துயில்கின்றன் வீறு கொண்டு யசோதையிடம்
நெட்டுருவாம் கம்சனை நீ சாடு.

8. அக்குழந்தை கொல்வதற்கே ஆயுத்தமாமளவில்
திககெட்டும் நடுங்கிடவே ஓர் வாக்கு—மக்கட்கு
நன்மைதனை செய்யாத மாபாவி கமசா நின்
தீதுயிரை மாப்பவனைத் தேடு.

# செய்திச் சுருக்கம்

## திருப்பதியில் சுவாமி சின்மயானந்தா

திருப்பதியில் 9-2-79 முதல் 18-2-79 வரை சுவாமி சினமயானநதா அவர்களின் 284-வது கீதையின் இரணடாவது அத்தியாயம சம்பந்தப்பட்ட தொடர் சொற்பொழிவு கூட்டம் நடைபெற்றது. இப்பத்து நாட்களின் போது காலையில் கேனோபநிஷத்து சம்பந்தப்பட்ட சொற்பொழிவுகளும் நடைபெற்றன. இத்தொடர் சொற்பொழிவு ஒட்டி 9-2-79 அன்று மாலை திருப்பதியில் ஏற்பாடு செய்யப்பட்ட விழாவிற்கு வருகை புரிந்தோரை தி.தி. தே. செயலாட்சித் தலைவர் திரு. பி. வி. ஆர். கே. பிரஸாத் அவர்கள் வரவேற்றார். இந்தியாவில் இந்து சமய வளர்ச்சியில் தி. தி. தேவஸ்தானத்தின் பங்கினை விளக்கிக்கூறி இந்தியக் கலாச்சாரம், மற்றும் இந்து சமய மேம்பாட்டிற்காகத் தொண்டு புரிந்து வரும் சமயத் தலைவர்களுக்கும், சமய நிறுவனங்களுக்கும் தி. தி தேவஸ்தானம் என்றென்றும் தன்னாலியன்ற உதவியினை வழங்க தயாராக உள்ளது என்றும் கூறினார். விழாவிற்கு ஸ்ரீ வேங்கடேஸ்வரா பல்கலைக் கழகத்தின் துணை வேந்தர் டாக்டர். எம். சாந்தப்பா அவர்கள தலைமை தாங்கினார். இக்கீதைச் சொற்பொழிவுகள சம்பந்தப்பட்ட விழா மலர் ஒன்றினை, சுவராஜ்யா பத்திரிகை ஆசிரியர் திரு. ஏ. எஸ். ராமன் அவர்கள் வெளியிட்டு உரையாற்றுகையில் இனறைய இளைஞர் தலைமுறையினரிடையே ஆன்மிகச் சூழ்நிலை குறைந்து வருவதைப்பற்றி குறிப்பிட்டு, சமயக் கல்வியின் அவசியத்தைப்பற்றி விளக்கிப் பேசினார். விழாவில் சிறப்புரையாற்றிய சுவாமி சின்மயானந்தா அவர்கள், உள்ளத்தில் ஆன்மீகச் சுதந்திரம் பெற்றால் தான், மனிதன் மனிதனாக வாழவும், அவனால் இச்சமுதாயம் சீர்படவும் முடியும் என்று கூறினார். தொடர்ந்து பேசுகையில் இளைஞர் சமுதாயத்தினர்க்கு வேணடிய கட்டுப்பாடு, நேர்மை மற்றும கடமை உணர்வுகளின் அவசியத்தைக் குறிப்பிட்டு, இப்பண்புகளைப்பெற இந்து சமயம் எவவகையில் உதவுகிறது என்பதையும் விளக்கிப் பேசினார். பத்து நாட்கள் நடைபெற்ற இத்தொடர் சொற்பொழிவு கூட்டத்திற்கு உள்ளூர் மக்கள், குறிப்பாக மாணவர்கள் வருகை புரிந்து பயன் பெற்றனர்.

## கால்பந்தாட்டப் போட்டி

தி. தி. தேவஸ்தானத்தின் ஆதரவில் 3வது ஆந்திரப் பிரதேச கால் பந்தாட்டப்போட்டி ஒன்று திருப்பதியில் 4-2-79 முதல் 7-2-79 வரை நடைபெற்றது இப்போட்டி ஒட்டி 4-2-79 அன்று காலை ஏற்பாடு செய்யப்பட்ட விழாவிற்கு தி. தி. தேவஸ்தான உதவி செயலாட்சித் தலைவர் திரு. என். நரசிம்மா ராவ் அவர்கள் தலைமை வகிக்க, திருப்பதி ஸ்ரீ வேங்கடேஸ்வரா பல்கலைக் கழகத்தின் பதிவாளர் திரு. எம். ஜே. கேசவமூர்த்தி அவர்கள் போட்டியினைத் துவக்கி வைத்தார். நான்கு நாட்கள் நடைபெற்ற இப்போட்டியில் தி. தி. தேவஸ்தான அணி உள்ளிட்டு 15 அணிகள் பங்கேற்றன. 7-2-79 அன்று மாலை நடைபெற்ற இறுதிப் போட்டியில் ஹைதராபாத்தைச் சார்ந்த ஆர்ட்டிலரி சென்டர் அணி, திருப்பதி டைனமோஸ் அணியை 'டை பிரேக்கர்' முறையில் வென்றது. அன்று மாலை நடைபெற்ற பரிசளிப்பு விழாவிற்கு, தி. தி தே. விளையாட்டுக் குழு உறுப்பினர் திரு. ஆர். வி. ராஜீவலோசன் அவர்கள வரவேற்பு உரையாற்ற, விழாவிற்கு தி. தி. தே. பொது ஜனத் தொடர்பு அலுவலர் திரு. ஆர். சூர்ய நாராயண மூர்த்தி அவர்கள் தலைமை வகித்தார். வெற்றி பெற்ற அணியினர்க்கு தேவஸ்தான கழற்கோப்பை மற்றும் வெள்ளிப் பதக்கங்களையும், டைனமோஸ் அணியினர்க்கு வெள்ளிப் பதக்கங்களையும், திரு. என். வரதாச்சாரி அவர்கள் வழங்கினார். திரு. சி. கே. ஜெயராமகிருஷ்ணன் அவர்கள் நன்றி நவின்றார்.

## புதிய விருந்தினர் விடுதி

தி. தி. தேவஸ்தானத்தாரின் வி.ஐ. பி. விருந்தினர் விடுதி கட்டிடம் ஒன்று திருப்பதியில் 15-2-79 அன்று தி. தி. தேவஸ்தான பொறுப்பாண்மைக குழுத் தலைவர் டாக்டர். என். ரமேஸன், ஐ. ஏ. எஸ். அவர்களால் திறந்து வைக்கப்பட்டது.

தி. தி. தேவஸதானததாரின் வி. ஐ. பி. விருநதினா விடுதி கட்டிடததை டாகடர். என். ரமேஸன அவர்கள் திறந்துவைக்கும்போது



## சுற்றுலாத் திட்டம்

ஆந்திரப் பிரதேசத்தின் சுற்றுலாத் துறையினரால், திருமலைக்கு வருகைபுரியும் யாத்திரிகர்களுக்கு உதவும் வகையில் 'சுற்றுப் பயணத் திட்டம்' ஒன்று மேற்கொள்ளப்பட்டுள்ளது.

திருப்பதியில் ஸ்ரீ கோவிந்தராஜ சுவாமி கோயில், ஸ்ரீ கோதண்டராம சுவாமி கோயில், ஸ்ரீ கபிலேஸ்வர சுவாமி கோயில் ஆகியவை மட்டுமல்லாது திருப்பதியைச் சுற்றியுள்ள ஸ்ரீநிவாச மங்காபுரம், திருச்சானூர், நாராயணவனம், கைலாசநாதகோனு, ஸ்ரீ காளஹஸ்தி ஆகிய இடங்களிலுள்ள கோயில்களுக்கும் யாத்திரிகர்கள் சென்று வரலாம். காலை 6-30 மணிக்குப் புறப்பட்டு, மாலை 7-30 மணிக்குத் திரும்புவதாக இருக்கும் இச்சுற்றுப் பயணத்திற்காக வசூலிக்கப்படும் கட்டணம் நபர் ஒருவருக்கு ரூ. 16/-ஆகும். (நான்கு வயதுக்கு மேம்பட்ட சிறுவர் சிறுமிகளுக்கும் முழு டிக்கெட் வாங்குதல் வேண்டும், இச்சுற்றுப் பயணம் 15 நபர்கள் செல்லும்படியான ஒரு தனி உந்து வண்டியில் ஏற்பாடு செய்யப்படும். செவ்வாய்க்கிழமை தவிர்த்து மற்ற எல்லா நாட்களிலும் இச்சுற்றுப் பயணம் மேற்கொள்ளப்படும். முழு விவரங்களுக்கு கீழ்வரும் முகவரியுடன் தொடர்பு கொள்ளுக: வட்டாரச் சுற்றுலாத் தகவல் அலுவலகம், 139, டி. பி. ஏரியா, திருப்பதி 517501. போன். 2598)

## கூடைப்பந்தாட்டப் போட்டி

தி. தி. தேவஸ்தானத்தாரின் ஆதரவில் திருப்பதியில் 22-2-79 முதல் 25-2-79 வரை நடைபெற்றது. தி.தி. தேவஸ்தான அணி உள்ளிட்டு தென்னிந்தியாவைச் சார்ந்த 19 அணிகள், 4 நாட்கள் நடைபெற்ற இப்போட்டியில் பங்கேற்றன. முதல் 2 நாட்கள் 'நாக் அவுட்' முறையிலும், இறுதி 2 நாட்கள் 'லீக்' முறையிலும் இப்போட்டி நடைபெற்றது. இப்போட்டி ஒட்டி 22-2-79 அன்று காலை நடைபெற்ற விழாவிற்கு தி. தி. தேவஸ்தான கல்வி அலுவலர் திரு. பி. ரங்கய்யா நாயுடு அவர்கள் தலைமை வகிக்க, திருப்பதி தேசியப் படையின் குழுத் தலைவர் கர்னல். மஹ்மூத் அவர்கள் போட்டியினைத் துவக்கி வைத்தார். 25-2-79 அன்று நடைபெற்ற இறுதி ஆட்டத்தில் ஹைதராபாத்தைச் சார்ந்த ஆர்ட்டிலரி சென்டர் அணி, கோயம்புத்தூர் லக்ஷ்மி குருப் மில்ஸ் அணியை தோற்கடித்தது. அன்று மாலை நடைபெற்ற பரிசளிப்பு விழாவிற்கு திரு. என். வரதாச்சாரி அவர்கள் தலைமை வகிக்க, தி. தி. தே. செயற்பொறியாளர் திரு. இ. ரங்கராஜு அவர்கள் வெற்றி பெற்ற அணியினர்க்கும், ஈற்றயற் போட்டி வரை தகுதி பெற்ற அணியினருக்கும் பரிசுகள் வழங்கினர்.

## மகளிர் பூப்பந்தாட்டப் போட்டி

தி. தி. தேவஸ்தானத்தின் ஆதரவில் இரண்டாவது மகளிர் பூப்பந்தாட்டப் போட்டி திருப்பதியில் 27-2-79, 28-2-79 ஆகிய தேதிகளில் நடைபெற்றது. ஆந்திராவைச் சார்ந்த 11 அணிகள் இப்போட்டியில் பங்கேற்றன. 28-2-79 அன்று நடைபெற்ற இறுதி ஆட்டத்தின்போது திருப்பதி ஸ்ரீ வேங்கடேஸ்வரா பல்கலைக் கழகக் கல்லூரிகள் அணி விஜய நகரத்தைச் சார்ந்த விஜய நகரம் கிளப் அணியை தோற்கடித்தது. அன்று மாலை நடைபெற்ற பரிசளிப்பு விழாவில், வெற்றி பெற்ற அணியினர்க்கும், ஈற்றயற் போட்டி வரை வெற்றி பெற்ற அணியினர்க்கும் திருமதி. கோபிகா பிரஸாத் அவர்கள் பரிசுகள் வழங்கினர்.

## முதலுதவி நிலையங்கள்

திருமலைக்கு வரும் யாத்திரிகர்கள் பயன்பெறும் வகையில், திருமலையில் கீழ்வரும் இடங்களில் தி. தி. தேவஸ்தானத்தாரால் முதலுதவி நிலையங்கள் திறக்கப்பட்டுள்ளன. (1) பி. பி. சி. கொட்டகைகள் (2) மத்திய வரவேற்பு அலுவலகம் (3) திருமலைக்குச் செல்லும் வழியில் (ஏழாவது மைலில்)

## ஓர் அறிவிப்பு

சென்னையிலுள்ள திருமலை திருப்பதி தேவஸ்தானத்தாரின் தகவலறிவிப்பு நிலையத்தில் ஹரிகதை மற்றும் அன்னமாச்சார்யா சங்கீர்த்தனங்கள் மட்டுமன்றி, தமிழிலும் தெலுங்கிலும் அடுத்தடுத்து, பாரதம், பாகவதம், ராமாயணம், கீதை சம்பந்தப்பட்ட சொற்பொழிவுகளும் நடத்த தேவஸ்தானம் முடிவு செய்துள்ளது. ஆகவே, இந்நிலையத்தில் தங்கள் நிகழ்ச்சிகளை நிகழ்த்த விரும்பும் அறிஞர்களும், பண்டிதர்களும் கீழ்வரும் முகவரியுடன் தொடர்பு கொள்ளவும்.

மேலாளர்,
தி. தி. தே. தகவலறிவிப்பு நிலையம்,
37, வெங்கடநாராயண சாலை,
தி. நகர் சென்னை-600017.

11-2-79 அன்று நடைபெற்ற, சென்னையிலுள்ள தி. தி. தேவஸ்தான தகவலறிவிப்பு நிலையத்தின் ஆண்டு விழாவின்போது, தமிழ்நாடு சட்ட அமைச்சர் திரு. நாராயண சுவாமி முதலியார் அவர்கள் சிறப்புரையாற்றினர். சென்னை தி. தி. தே. உள்ளூர் ஆலோசனைக் குழுத் தலைவர் திரு. ஜே. வி. சோமயாஜுலு அவர்களும், தி. தி. தே. செயலாட்சித் தலைவர் திரு. பி வி. ஆர். கே. பிரஸாத் அவர்களும் இவ்விழாவில் பங்கேற்றனர்.



## திருப்பதியில் ஸ்ரீ மஹாலக்ஷ்மி லக்ஷார்ச்சனை

திருப்பதியில் கோவிந்தராஜ தேர டித் தெருவில் பூர்வம மஹாவித் வானன புரிசை ஸ்ரீ ரங்காச்சாரியார் ஸ்வாமி எழுந்தருளியிருநத திருமாளி கையில் லோககேஷமார்தம் 18-2-79 அன்று ஆஸ்திகர்களால் ஸ்ரீ மஹா லக்ஷ்மி லக்ஷார்ச்சனே ஆர். கிருஷ்ண ஸ்வாமி அய்யங்கார் தலைமையில் 9-2-79 முதல் 18-2-79 வரை நடத்தப் பட்ட மஹோத்ஸவத்தில் ஸ்ரீ உ. வே. டி. கே. கோபால ஸ்வாமி அய்யங் கார், ஸேவா ஸ்ரீநிவாஸ ராகவாச் சாரியார், என். எஸ். ராமானுஜ தாதா சாரியாா, பையம்பாடி வெங் கட வரதாச்சாரியார், புதுக்கோட்டை சேஷாத்ரி அய்யங்கார், திருவேந்திர புரம் ராஜகோபாலாச் சாரியார் முதலிய அறிஞர்கள் உபந்யஸித் தாாகள்.

வக்கில் ஸ்ரீமான் துரைராஜ் அவர் கள், ஸ்ரீமந் நிகமாந்த மஹாதேசிகன் அருளிய ''ஹயக்ரீவ ஸ்தோத்ரம்'' ''ஸுதர்ஸநாஷ்டகம்'' ஆகிய நூல் களைத் தெலுங்கில் அச்சிட்டு பக்தர் களுக்கு இலவசமாக வழங்கினர்.

இச்சபையில் தேசிக ஸமப்ரதாயத் திற்கு இடையரு தொணடு புரிந்து வரும் ஸ்ரீமான் என்.எஸ்.வி. ராகவன் அவர்களுக்கு ''ஸ்ரீ தேசிக ஸம்ப்ரதாய ஸேவா ஸக்த:'' எனும் பிருது அளிக் கப்பட்டது. ★

---

(4-ம் பக்கத் தொடர்ச்சி)

இந்துசமய இலக்கியத் துறையினை ஊக்குவிக்கும் வகையில் குழு கீழ் வருமாறு சில தீர்மானங்களை நிறை வேற்றியுள்ளது.

1. சமய நூல்கள் வெளியிடுவதற்காக ரூ. 5 இலட்சம் ஒதுக்குதல்.
2. புதிதாக எழுதப்படும் சமயம் சம் பந்தப்பட்ட நூல் ஒன்றிற்கு ஆந் திர சாகித்ய அகாடமியினரைப் போன்று ரூ. 5000/- வழங்கப் படல். அச்சிட்ட பின்னர் அந நூலின் 50 பிரதிகள் ஆசிரியர்க்கு இலவசமாக வழங்குதல்.
3. ஏற்கெனவே பிரசுரிக்கப்பட்டிருக் கும் நூலாக இருப்பின், ஒரு குறிப் பிட்ட எண்ணிக்கைக் கொணட, அதனுடைய பிரதிகளை ஆசிரியரிட மிருந்து விலைக்கு வாங்குதல்,

**ஸப்தகிரி மாத இதழ் சமபந்தப்பட்ட முடிவுகள்**

ஸப்தகிரியில் வெளியிடப்படும் கட்டு ரையின் ஒவ்வொரு பக்கத்திற்கு ரூ. 15-ம், மொழிபெயர்ப்பு கட்டுரையாக இருப்பின் பக்கததிற்கு ரூ. 7-50-ம் (மொத்தத்தில் ரூ. 100/-க்கு மிகாமல்) வெளியிடப்படும் ஒவ்வொரு புகைப படத்திற்கு ரூ. 15/-ம் வழங்குவதென றும், மேலும் கட்டுரை ஆசிரியர்கசு குறிப்பிட்ட கட்டுரை வெளியாகும இதழின் 5 பிரதிகள மற்றும் கட்டுரை யின் 15 பிரதிகளை அனுப்பவதென் றும் குழு தீர்மானித்து, மேற்கூறிய தீர்மானங்கள், அரசு ஒப்புதலுக்கு ஆந்திர மாநில அறநிலையத்துறை ஆணையருக்குப் பரிந்துரை செய்யப் பட்டுள்ளன.

தி. தி. தேவஸ்தான அச்சகத்திற் கென, புத்தகங்களை தைக்கும் ''கம்பி தையற் இயந்திரம்'' ஒன்றினை வாங்கு தற்கு குழு ரூ.11,000 ஒதுக்கியுள்ளது.

தி. தி. தேவஸ்தான அச்சகத்தில் ஆஃப்செட் அச்சு இயந்திரம் ஒன்றினை வாங்குதற்கு குழு ரூ. 7,00,000 ஒதுக் கியுள்ளது.

தி. தி. தேவஸ்தான பொறுப்பாண் மைக்குழுத் தலைவர் டாக்டர். என். ரமேசன், எம்.ஏ , பிஎச்.டி., ஐ.ஏ.எஸ், அவர்கள் எழுதிய 'திருமலைக்கோயில்' எனும் ஆங்கில நூலின் 2000 பிரதி கள் பிரசுரிக்கவும், மேலும் அந் நூலினை தமிழ், தெலுங்கு, இந்தி ஆகிய மொழிகளில் மொழி பெயர்த்து வெளியிடவும் குழு தீர்மானித்துள் ளது.

தி. தி. தேவஸ்தானத்தாரின் ஆதர வில் கிராமப்புறங்களில் நடைபெறும் கண அறுவைச் சிகிச்சை முகாம்களுக் கென ''கரியோ ஸர்ஜிகல் யூனிட்'' (கீலர்ஸ்) ஒன்றினை வாங்குதற்கு குழு ரூ. 25,000 ஒதுக்கியுள்ளது.

ஹைதாரபாததில் நிறுவப்படவி ருக்கும் 'வேமண்ணு யோகா ஆராய்ச்சி நிலையம்' ஒன்றினை அமைக்கும் பணிக் குத்தான் உதவும் வகையில், ராம கிருஷ்ணு மிஷன் கட்டிடத்தை தான் விலைக்கு வாங்கி அதனை வருடம் ஒன் றிற்கு ரூ. 1/- என அவ்வாராய்ச்சி நிலை யத்திற்கு வாடகைககு விடவு ம, இவ்வாராய்ச்சி நிலையம் தொடங்குவ தறகு தன்பங்காக ரூ. 5 இலட்சம் வழங்கவும் குழு தீர்மானித்துள்ளது.

ஆந்திரமாநிலம் நந்தியாலாவில் தி. தி. தேவஸ்தானத்தாரின் திருமண மண்டபத்துடன் இணைந்த தகவலறி விப்பு நிலையம் ஒன்றினைக் கட்டுதற்கு குழு ரூ. 7 இலட்சம் ஒதுக்கியுள்ளது.

தமிழ் நாடு தஞ்சை மாவட்டத்தில் நாங்கநல்லூரிலுள்ள அருள்மிகு நாரா யண பெருமாள் கோயிலின் புதுப்பித் தல் பணிகளுக்காக குழு ரூ. 25,000 வழங்க தீர்மானித்துள்ளது.

ஆந்திர மாநிலத்தில் பல்வேறு மாவட்டங்களைச் சார்நத இடங்களி லுள்ள கோவில்களைப் புதுப்பித்தல் பணிகளுக்காக குரு ரூ. 2,77,050 ஒதுக்கியுள்ளது.

ஆந்திரமாநிலத்தின் பல்வேறு இடங் களிலுள்ள ஹரிஜனவாடாக்களில் ராம மந்திரங்களைக் கட்டுதற்கு குழு ரூ. 1,20,000 ஒதுக்கியுள்ளது.

ஒய்வு பெற்ற ஊழியர்களுக்கு வங்கி கள் மற்றும் தபால் நிலையங்கள் மூலம் ஓய்வூதியம் வழங்கும் வகையில் விளங் கும் எண் 422 நிதி மற்றும் திட்டத் (நிதிபகுதி பி.எக்ஸ் வி4) துறையின் 3-12-77 தேதியிட்ட அரசு உத்திர வினை தேவஸ்தானமும் அமுலாகக குழு அனுமதியளித்துள்ளது.

திருமதி. எம். எஸ். சுப்புலட்சுமி அவர்களின் உதவியால் 5 எல். பி. இசைத்தட்டுக்களின்மூலம் அன்னமாச் சார்யா கீர்த்தனைகளையும் மற்றும் சில முக்கிய ஸ்தோத்திரங்ககளையும் செய் வதென்று குழு முடிவு செய்துளளது.

இந்து சமயத்தின் பெருமையைப் பரப்பும் வகையில பல சமய நூலகளை வெளியிடவும், குழநதைகளுக்கு அவசி யமான புராணம் மற்றும் நீதி சம்பந் தப்பட்ட நூல்களைப் பிரசுரிக்கவும், மற்றும் மேலும் பல ஆக்கப்பூர்வமான பணிகளுக்காக பலமுயற்சிகளை எடுத்து வரும் ''அபுயுதய பிராத்மிக வித்யா சமஸ்தா'' எனும் நிறுவனத்திற்கு தவணை முறையில் (ரூ. 5 இலட்சம் வீதம்) ரூ, 25 இலட்சம் வழங்க குழு தீர்மானித்துள்ளது. ★

# ராசிபலன் (1-3-79 முதல் 31-3-79 வரை)

டாக்டர் டி. அர்க்கசோமயாஜி, M.A., Ph.D.
திருப்பதி.

## மேஷம்

(அசுவனி, பரணி, கார்த்திகை முதல் பாதம முடிய)

ராகுவினுல் கவலைகள்; சனியினுல் கருத்து வேறுபாடுகள், பணநஷ்டம், தன் பிள்ளைகளினுல் கவலைகளுக்குள ளாதல்; குருவினுல் உறவினர்களின் மூலம் கவலைகளுக்குள்ளாதல்; செவ்வாயினுல்முயற்சிகள்வெற்றியடைதல்: புதனுல் எதிரிகளால் கவலைக்குள்ளாதல் அல்லது இகழ்ச்சிக்குள்ளாதல் அல்லது உடல்நலம் கெடல்; சுக்ரன் மாதத்தின் 23-ம் தேதி வரை நன்மை பயப்பதால்பணவரவு, புதியநணபர்கள் புதிய ஆடை ஆபரணங்கள், ஆனுல் இறுதியில் எதிர் மாருக செயற் படல். சூரியன் மாதத்தின் 14-ம் தேதி வரை நன்மை புரிவதால் பண வரவு, வெற்றி, மதிப்புயர்தல் ஆனுல் இறுதி நாட்களின்போது தீமைகள் புரிதல்.

## ரிஷபம்

(கார்த்திகை 2-ம் பாதம் முதல், ரோகிணி, மிருக சீரிஷம் 2-ம பாதம் முடிய)

ராகுவினுல் கருத்து வேறுபாடுகள்; சனியினுல் பண நஷ்டம், நட்பு முறிதல், உற்ருர் உறவினரிடமிருந்து பிரிவு அல்லது அவர்களுடன் கருத்து வேறுபாடுகள்; குருவினுல் ஏமாற்றங்கள். ஆனுல் இவைகளைச் சமாளிக்கும் வகையில் சூரியனுல் வெற்றி, மதிப்புயர்தல், பணவரவு உடல்நலமேன்மை; செவ்வாயினுல் அதிக பணவரவு அல்லது வாகன வாய்ப்பு அல்லது நண்பர்கள் அல்லது மக்கட்பேறு; சுக்ரனுல் புதிய ஆடை ஆபரணங்கள், பணவரவு, நல்ல நடவடிக்கைகளில் ஈடுபடுதல்.

## மிதுனம்

(மிருக சீரிஷம 3-ம் பாதம் முதல், திருவாதிரை, புனர் பூசம் 3-ம பாதம் முடிய)

ராகுவினுல் பணவரவு; சனியினுல் உடல நலமேன்மை, பணவரவு அல்லது வாகன வாய்ப்பு, குடும்பத்தில மகிழ்ச்சி; குருவினுல் அதிக பணவரவு; வெற்றி, சுக்ரனுல் பணவரவு, புதிய ஆடை ஆபரணங்கள், புதியவீடு. செவ்வாயினுல் பணநஷ்டம், ஏமாற்றங்கள்; சூரியனுல் மாதத்தின் முதல் பகுதியின் போது உடல் நலம் கெடல் அல்லது பணநஷ்டம. ஆனுல் இரணடாவது பகுதியின்போது எல்லாவகைகளிலும் முயற்சிகள் வெற்றியடைதல்; புதனுல் எதிரிகளை வெற்றி கொளல்; பணவரவு, மகிழ்ச்சி.

## கடகம்

(பூனர் பூசம் 4-ம் பாதம் முதல் பூசம் ஆயில்யம் முடிய)

ராகுவினுலும் சனியினுலும் பணநஷ்டம்; குருவினுல் மனயமைதி இழத்தல், கருத்து வேறுபாடுகள், பணநஷ்டம்; செவ்வாயினுல் உடலில் காயம் ஏற்படல் அல்லது பணநஷ்டம் அல்லது மதிப்புக்குறைதல்; புதனுல் முயற்சிகள் தடைபடுதல். சுக்ரனுல் பெண்களின் மூலம் கெடுதிகள் ஏற்படல். சூரியனுல் மாதத்தின் முதல் 15 நாட்களின் போது உடல் நலம் கெடல், அல்லது மனைவிக்கு மனயமைதியின்மை. இறுதி 16 நாட்களின் போது பணநஷ்டம் அல்லது முயற்சிகள் தோல்வியடைதல் அல்லது உடல் நலம் கெடல்.

## சிம்மம்

(மகம், பூரம், உத்திரம் முதல் பாதம் முடிய)

ராகுவினுல் கவலைகள்; சனியினுல் உற்ருர் உறவினருடன் பிரிவு அல்லது உறவினர்க்கு கெடுதி ஏற்படல் அல்லது அவர்களால் கெடுதிகள் ஏற்படல் அல்லது பிரயாணத்தால் கெடுதிகள் எற்படல். தவருன இடங்களில் சிறிது காலம் தங்கி இருகக நேரிடல் அல்லது பணநஷ்டம் அல்லது மகனுடன் பிரிவு; குருவினுல் பிரயாணமும், உடல்நலம் கெடலும்; செவ்வாயினுல்மனைவியுடன் கருத்து வேறுபாடு கொளல் அல்லது கண் அல்லது வயிறு சம்பந்தப்பட்ட நோயினுல் அவதிப்படல்; புதனுல் வெற்றி, புதிய ஆடை ஆபரணங்கள், பணவரவு, மக்கட்பேறு; சுக்கிரனுல் மதிப்புக் குறைதல் அல்லது உடல்நலம் கெடல்; சூரியனுல் மாதத்தின் முதல் 15 நாட்களின் போது பிரயாணம், வயிறு சம்பந்தப்பட்ட நோய்களினுல் அவதிப்படல். இறுதி நாட்களின் போது மனைவிக்கு மனயமைதி கெடல் அல்லது உடல்நலம் கெடல்,

## கன்னி

(உத்திரம் 2-ம் பாதம் முதல், அஸ்தம், சித்திரை 2-ம் பாதம் முடிய)

ராகுவினுலும் சனியினுலும் கவலைகள்; குருவினுல் பணவரவு; செவ்வாயினுல் எதிரிகளை வெற்றி கொளல்; கருத்து வேறுபாடுகள் மறைதல், அதிக பணவரவு, புதிய மரச்சாமான்கள் வாங்கப் பெறல் முதலியன. புதனுல் கருத்து வேறுபாடுகள்; சுக்கிரனுல் பணவரவு, பெரியோர்களின் பாராட்டுதல்களுக்குள்ளாதல், உறவினர் வருகை, புதிய நண்பர்கள், மக்கட்பேறு; சூரியனுல் மாதத்தின் முதல் 15 நாட்களின் போது உடல் நலமேன்மை, எதிர்ப்புகளை சமாளித்தல், மகிழ்ச்சி. இறுதி நாட்களின்போது பிரயாணம் அல்லது வயிற்று வலியால் அவதிப்படல்.

## துலா

(சித்திரை 3-ம் பாதம் முதல், ஸ்வாதி, விசாகம 3-ம் பாதம் முடிய)

*ராகுவினுல் மகிழ்ச்சி; சனியினுல் உற்சாகம், பண வரவு; குருவினுல் பண நஷ்டம், மதிப்புக்கெடல்; செவ்வாயினுல் தன பிள்ளைகளினுல் கவலைக்குள்ளாதல் அல்லது உடல் நலம் கெடல் அல்லது எதிரிகள் ஏற்படல். புதனுல் வெற்றி, மதிப்புயர்தல், சுக்ரனுல் நல்ல நட்புறவுகள்; சூரியனுல் மாதத்தின் முதல் 15 நாட்களின் போது உடல் நலம் கெடல் அல்லது எதிரிகளால் துன்பங்களுக்குள்ளாதல்; ஆனுல் இறுதி நாட்களினேபாது உடல் நலமேன்மை, எதிரிகளை வெற்றி கொளல்.*

## விருச்சிகம்

(விசாகம் 4-ம் பாதம் முதல், அனுஷம் கேட்டை முடிய)

*ராகுவினுல் கருத்து வேறுபாடுகள்; சனியினுல் பண நஷ்டம் அல்லது மதிப்புக் கெடல்; குருவினுல் பண வரவு, வெற்றி, தானிய வகைகள் கிடைக்கப்பெறல் அல்லது மக்கட்பேறு; செவ்வாயினுல் உடல் நலம் கெடல் அல்லது வயிறு சம்பந்தப்பட்ட நோயினுல் அவதிப்படல் அல்லது இரத்த சோகை. மேலும் தீயோரால் அல்லது தவருன ஆலோசனைகளைக் கேட்டதன்பேரில் கவலைகளுக்குளளாதல்; புதனுல் மனைவி அல்லது பிள்ளைகளுடன் கருத்து வேறுபாடு கொள்ளுதல்; சுக்ரனுல் பண வரவு; மதிப்புயர்தல்; புதிய ஆடை ஆபரணங்கள்; வெற்றி; சூரியனுல் மாதத்தின் முதல் 15 நாட்களின்போது உடல் நலம் கெடல். ஆனுல் இறுதி நாட்களின்போது எதிரிகள் அல்லது உடல் நலம் கெடுவதால் கவலைகளுக்குள்ளாதல்.*

## தனுசு

(மூலம், பூராடம், உத்திராடம முதல் பாதம் முடிய)

*ராகுவினுல் தீய நடவடிக்கைகளில் ஈடுபடுதல்; சனியினுல் கருத்து வேறுபாடுகள் அல்லது உடல்நலம் கெடல்; தீய நடவடிக்கை ஒன்றினை மேற்கொளல்; குருவினுல் உடல் நலம் கெடல், பிரயாணத்தின்போது கவலைக்குள்ளாதல்; செவ்வாயினுல் பிள்ளைகளின் மூலம் பண வரவு அல்லது தான்ய வகைகள் கிடைக்கப்பெறல், மதிப்புயர்தல், குடும்பத்தில் நன்மைகள் ஏற்படல், மக்கட்பேறு; புதனுலும் குடும்பத்தில் நன்மைகள் ஏற்படல்; சூரியனுல் மாதத்தின் முதல் 15 நாட்களின்போது பண வரவு, தன்னிலை உயர்தல். ஆனுல் இறுதி நாட்களின்போது உடல் நலம் கெடல்.*

## மகரம்

(உத்திராடம் 2-ம் பாதம் முதல், திருவோணம், அவிட்டம் 2-ம் பாதம் முடிய)

*ராகுவினுல் கவலைகள்; சனியினுல் மனைவியிடமிருந்து அல்லது பிள்ளைகளிடமிருந்துபிரிவு; குருவினுல் குடும்பத்தில் மகிழ்ச்சி; செவ்வாயினுல் அலுவலகக்கவலைகள் அல்லது கருத்து வேறுபாடுகள் அல்லது உடல் நலம் கெடல்; அல்லது வீட்டில் திருடுபோதல்; சுக்ரனுல் அதிக மகிழ்ச்சியைத் தந்திடும் மனநிலையை அடையப் பெறல்; புதனுல் அதிக நணபர்கள் ஆனுல் தன்னுடைய நடவடிக்கையின் காரணமாக அலுவலகக் கவலைகளுக்குள்ளாதல்; சூரியனுல் மாதத்தின் முதல் 15 நாட்களின்போது பண நஷ்டம், கண் சம்பந்தப்பட்ட தொதிந்ரவுகளினுல் அவதியுறநேரல் அல்லது மற்றவர்களால் ஏமாற்றப்படல் ஆனுல் இறுதி நாட்களின்போது பண வரவு, தன்னிலை உயர்தல், எதிரிகளை வெற்றி கொளல்.*

## கும்பம்

(அவிட்டம் 3-ம் பாதம் முதல், சதையம், பூரட்டாதி 3-ம பாதம் முடிய)

*ராகுவினுல் கருத்து வேறுபாடுகள்; சனியினுல் பிரயாணம்; குருவினுல மனயமைதி பறிபோதல்; செவ்வாயினுல் உடல் நலம் கெடல்; சுக்ரனுல் கெடுதிகள் ஏற்படல்; புதனுல் இகழ்ச்சிக்குள்ளாதல் ஆனுல் பண வரவு, சூரியனுல் மாதத்தின் முதல் 15 நாட்களின்போது உடல் நலம் கெடல் அல்லது வயிறு சம்பந்தப்பட்ட தொந்திரவுகளினுல் அவதியுறல் அல்லது பண நஷ்டம் அல்லது பிரயாணம் இறுதி நாட்களின்போது தேவையற்ற செலவுகள் அல்லது கண் சம்பந்தப்பட்ட தொந்திரவுகளினுல் அவதியுறல் அல்லது மற்றவர்களால் ஏமாற்றப்படல்.*

## மீனம்

(பூரட்டாதி 4-ம் பாதம் முதல், உத்திரட்டாதி, ரேவதி முடிய)

*ராகுவினுல் பண வரவு; சனியினுல் உடல் நலமேன்மை, வெற்றி; குருவினுல் அதிக அளவில் பொருள் வரவு, புதிய ஆடை ஆபரணங்கள் அல்லது வீடு வாய்ப்பு அல்லது மக்கட்பேறு அல்லது வாகன வாய்ப்பு; செவ்வாயினுல் பண நஷ்டம், கவலைகள் ஏற்படல், மனைவிக்கு மனமகிழ்ச்சியின்மை அல்லது கண் சம்பந்தப்பட்ட தொந்திரவினுல் அவதியுறல்; புதனுல் தவருன ஆலோசனைகளைக் கேட்டதின் பேரில் கருத்து வேறுபாடுகள் ஏற்பட்டு அதனுல் பண நஷ்டம்; சுக்ரனுல் பண வரவு, புதிய ஆடை ஆபரணங்கள், நண்பர்கள்; சூரியனுல் மாதத்தின் முதல் 15 நாட்களின்போது சுமாரான நன்மைகள் அடையப் பெற்றுலும், இறுதியில் பண நஷ்டம், அல்லது வயிறுசம்பந்தப்பட்ட தொந்திரவினுல் அவதியுறல் அல்லது பிரயாணம் மற்றும் உடல் நலம் கெடல்.*

★

EDITED AND PUBLISHED ON BEHALF OF THE T. T. DEVASTHANAMS BY K. SUBBA RAO, M.A. AND PRINTED AT T.T.D. PRESS BY M. VIJAYAKUMAR REDDY, MANAGER, T. T. D. PRESS, TIRUPATI. 517501



போட்டியில் வெற்றி பெற்ற தென்மத்திய இரயில்வே அணித்தலைவர்க்கு தி. தி. தே சுழற்கோப்பையினை திருமதி கோபிகா பிரஸாத் அவர்கள் (செயலாட்சித்தலைவரின் துணைவியார்) வழங்கியபோது

திருப்பதியில், தி.தி. தேவஸ்தானத்தாரின் 3-வது ஆந்திரப் பிரதேச உந்துபந்தாட்டப் போட்டி அண்மையில் நான்கு நாட்கள் நடைபெற்றது.

உந்துபந்தாட்டப் போட்டியின் இறுதி ஆட்டம் மின் ஒளி வெள்ளத்தில் நடைபெற்ற போது



Regd. No. H/TRP/12 தனிப்பிரதி 50 காசு



## திருமலை திருப்பதி தேவஸ்தானம்
## ஸ்ரீ வேங்கடேஸ்வர ஸ்வாமி கோயில், திருமலை.

# ஆர்ஜிதக் கட்டண விவரங்கள்

ஹாரத்தி (ஒவ்வொன்றுக்கும்) கட்டணம் ரூ. 1

### ஸேவைகள் (ஸேவிப்பது மாத்திரம்)

| | | |
|---|---|---|
| சிறப்பு தரிசனம் | ரூ. | 25 |

### கைங்கர்யங்கள் (செய்து வைப்பது)

| | | |
|---|---|---|
| ஆமந்த்ரணோத்ஸவம் | ,, | 200 |
| பூலங்கி ஸேவை | ,, | 60 |
| திருமஞ்சனம் | ,, | 450 |
| கம்பூராக் கிண்ணி | ,, | 250 |
| புனுகுசட்டம் கிண்ணி | ,, | 100 |
| கஸ்தூரிக் கிண்ணி | ,, | 100 |
| ஜாபாராக் கிண்ணி | ,, | 100 |
| ஸஹஸ்ர கலசாபிஷேகம் | ,, | 2500 |
| திருப்பாவாடை | ,, | 5000 |
| கோயிலாழ்வார் திருமஞ்சனம் | ,, | 1745 |

### உத்ஸவக் கட்டணங்கள்

| | | |
|---|---|---|
| வஸந்தோத்ஸவம் | ,, | 2500 |
| பிரம்மோத்ஸவம் | ,, | 750 |
| கல்யாண உத்ஸவம் | ,, | 1000 |
| ஊஞ்சல் சேவை | ,, | 1000 |
| தெப்போற்சவம் | ,, | 1500 |

### வாஹனங்கள்

ஸர்வபூபாலம் வஜ்ரகவச சேவை
72+1 (ஹாரத்தி) ,, 73

ஸர்வபூபாலம், கல்பவ்ருக்ஷம், பெரிய சேஷவாஹனம் ஸூர்யப்ரபை, புஷ்பரதம், முத்துப்பந்தல், தங்ககருடவாஹனம் தனித்தனி 62+1 (ஹாரத்தி) ரூ. 63

வெள்ளி கருடவாஹனம், ஹனுமந்த வாஹனம், சின்ன சேஷவாஹனம், குதிரை வாஹனம், ஸிம்ஹவாஹனம், ஹம்ஸ வாஹனம், சந்திரபிரபை, யானை வாஹனம் தனித்தனி 32+1 (ஹாரத்தி) ,, 33

### பிரஸாதங்கள் (கால் சோலா தளிகை ஒன்றுக்கு)

| | | |
|---|---|---|
| தத்யோதனம் | ,, | 40 |
| புளிஹோரை | ,, | 50 |
| பொங்கல் | ,, | 55 |
| சர்க்கரைப் பொங்கல் | ,, | 65 |
| ஸாகர்பாத் | ,, | 80 |
| கேஸரிபாத் | ,, | 90 |
| பாயஸம் | ,, | 85 |
| சீரா | ,, | 155 |

### படிகள் (படி ஒன்றுக்கு)

| | | |
|---|---|---|
| லட்டு | ,, | 455 |
| வடை | ,, | 250 |
| போளி | ,, | 220 |
| தோசை | ,, | 100 |
| ஸுகியம் | ,, | 200 |
| ஜிலேபி | ,, | 450 |
| அப்பம் | ,, | 230 |
| தேன்குழல் | ,, | 200 |

### நித்திய ஸேவைகள்

| | | |
|---|---|---|
| நித்திய கர்ப்பூர ஹாரத்தி | ,, | 21 |
| நித்திய நவநீத ஹாரத்தி | ,, | 42 |
| நித்திய அர்ச்சனை | ,, | 42 |

குறிப்பு: ஸஹஸ்ர கலசாபிஷேகம் ஒவ்வொரு புதன்கிழமையும், திருப்பாவாடை ஒவ்வொரு வியாழக்கிழமையும் நடைபெறும்.
மற்றைய விவரங்களுக்கு கீழே கொடுக்கப்பட்டுள்ள முகவரியுடன் தொடர்புகொள்ளுக.

செயலாட்சித் தலைவர்,
திருமலை திருப்பதி தேவஸ்தானம்,
திருப்பதி 517501.

1-3-79 முதற்கொண்டு திருமலை ஸ்ரீ வேங்கடேஸ்வரசுவாமி கோயிலின் தினசரி நிகழ்ச்சி நிரல்கள் மாற்றஞ் செய்யப்பட்டுள்ளன. முழுவிவரங்கள் அடுத்த இதழில் வெளியிடப்படும். (ஆ-ர்)